

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 19 Issue 5 December 2024 Rs.30
ஆண்டு 19 இதழ் 5 டிசம்பர் 2024 ரூ.30

அ. முத்துலிங்கம்
கயல்
தாமரை பாரதி
இமையம்
ஹரணி
ஸிந்துஜா
ஸ்ரீநிவாச கோபாலன்
வேலு இராஜகோபால்
சீ.பாஸ்கர்
செ.சண்முகசுந்தரம்
பாவண்ணன்
இளங்கோ

ஓரான்பாமுக் நோபல் உரை
தமிழில்: ஸிந்துஜா

சர்வதேச திரைப்பட விழா அரசியல்
ரதன்

# வெப்ப அலையும் தமிழக பொருளாதாரமும்

பிரபுதிலக்

ஆண்டு 19 இதழ் 5



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

டிசம்பர்-2024 விலை ரூ. 30



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...

# வெப்ப அலையும் தமிழக பொருளாதாரமும்

**பிரபு திலக்**

தமிழ்நாடு மாநில திட்ட ஆணையம் சமீபத்தில் வெளியிட்டுள்ள அறிக்கை, வெப்ப அலையால், பல்வேறு துறைகளிலும் தமிழ்நாடு பொருளாதாரத்தில் ஏற்படப் போகும் இழப்புகளை பட்டியலிட்டு எச்சரிக்கை செய்துள்ளது. இந்தப் பிரச்சினைகளை எதிர்கொள்ள முன்கூட்டியே தயாராவதன் மூலமே, இழப்புகளை தடுக்கவோ சமாளிக்கவோ முடியும் என்றும் அரசுகள் அந்த நோக்கில் செயல்பட வேண்டும் என்றும் இந்த அறிக்கை வலியுறுத்தியுள்ளது. வெப்ப அலையால் அப்படி என்னென்ன பாதிப்புகள் ஏற்பட வாய்ப்புள்ளது? அதற்கு தீர்வு என்ன?

வெப்ப அலை காரணமாக ஒரு நாளில் குறைந்தது ஒருவர் உயிரிழந்தால், அது மோசமான வெப்ப அலை நாள் எனப்படுகிறது. இதன்படி, 1969 முதல் 2021 வரையிலான 52 ஆண்டுகளுக்கு இடையில் தமிழ்நாட்டில் அனைத்து மாவட்டங்களுக்கான தரவுகளையும் சேர்த்துப் பார்க்கும் போது 591 மோசமான வெப்ப அலை நாட்கள் பதிவாகியுள்ளது. அதிலும், 2011 முதல் 2021 வரையிலான பத்தாண்டுகளில், சராசரியாக ஓராண்டுக்கு எட்டு வெப்ப அலை நாட்களை தமிழ்நாடு எதிர்கொள்ள வேண்டியிருந்தது என்று இந்திய வானிலை ஆய்வு மையத்தின் தரவுகள் கூறுகின்றன. குறிப்பாக, இந்த ஆண்டுகளில் மார்ச் ஸ்ரீ ஆகஸ்ட் மாதங்களுக்கு இடையில் கூடுதலான வெப்பம் பதிவாகியுள்ளது.

மனிதர்கள் சராசரியாக 25 முதல் 30 டிகிரி செல்சியஸ் வெப்ப நிலையிலும், 60% ஈரப்பதம் இருக்கும் சூழலிலும் இருப்பது உகந்தது. ஆனால், தமிழ்நாட்டில் 74%க்கும் மேலான மக்கள் தொகை 35 டிகிரி செல்சியஸ் அளவுக்கும் கூடுதலான வெப்ப நிலையை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. அதிலும், மிக வலுவான வெப்ப அழுத்தத்தை சந்திக்கும் ஆபத்துள்ள பகுதிகளில் தமிழ்நாட்டின் 50% மக்கள் வசிக்கின்றனர். ஒவ்வொரு ஆண்டும், மார்ச் மாதம் முதல் ஜூன் மாதம் வரையிலான காலத்தில், மாநிலத்தின் 68% மக்கள் எட்டு முதல் ஒன்பது மணி நேரம் வெப்ப அழுத்தத்தை எதிர்கொள்கின்றனர் என்றும் தரவுகள் தெரிவிக்கின்றன.



வெப்ப அலையால் உடல் உபாதைகள், பருவநிலைப் பிரச்சினைகள் ஏற்படுவது போல் பல்வேறு துறைகளிலும் பொருளாதார பாதிப்புகளும் ஏற்படுகின்றன. அந்த வகையில் தமிழ்நாட்டுக்கு என்னன்ன பாதிப்புகள் ஏற்பட வாய்ப்புள்ளது என மாநில திட்ட ஆணையம் அறிக்கையில் தெரிவித்துள்ளது.

அதில், 'ஒவ்வொரு காலநிலை பேரிடர் காரணமாகவும் 300 முதல் 500 மில்லியன் டாலர் மதிப்பிலான பொருளாதார இழப்பை தமிழ்நாடு சந்திக்கிறது. வெப்பமண்டல பகுதியில் அமைந்திருக்கும் தமிழ்நாடு, வெப்ப அலை காரணமாகவும் அதிகமாக பாதிக்கப்படும் என்று கணிக்கப்பட்டுள்ளது. இரவு நேர வெப்பம் அதிகரிப்பு, தீவிர வெப்ப அலை நெடு நேரம் நீடிப்பது, குளிர்ந்த பருவகாலங்களிலும் வெப்பமான நாட்களின் அதிகரிப்பு ஆகிய மாற்றங்கள் ஏழை எளிய மக்கள், முறைசாரா தொழிலாளர்கள், உடல் பலவீனமானவர்களையே அதிகமாக பாதிக்கும். உற்பத்தியிலும் நேரடியான பாதிப்பு இருக்கும்.

2030ஆம் ஆண்டுக்குள் இந்தியா தனது ஒட்டுமொத்த வேலை நேரத்தில், 3.4 கோடி வேலைகளுக்கு இணையான, 5.8% வேலை நேரத்தை இழக்கக் கூடும் என்று சர்வதேச தொழிலாளர் அமைப்பு கூறுகிறது. இது இந்தியாவின் உள்நாட்டு உற்பத்தியில் தாக்கம் செலுத்தக் கூடும்.

ஸ்விக்கி, ஜோமேடோ போன்ற உணவு விநியோகம்; ஊபர், ஓலா போன்ற டாக்ஸி சேவை தளங்களில் பணிபுரிபவர்கள் கிக் பணியாளர்கள் என அழைக்கப்படுகிறார்கள். இத்தகையக வெப்பமான பணிச்சூழலில் இருப்பவர்கள் உள்ளிட்டவர்களுக்கு வெப்ப அலைகளின் தாக்கம் அதிகமாக இருக்கும் என்று திட்ட ஆணைய அறிக்கை



கூறுகிறது. வெப்பம் காரணமாக ஏற்படும் அழுத்தம் (stress) பணியாளர்களின் வேலைத்திறனையும் உற்பத்தியையும் குறைக்கும். பொருட்களின் விநியோகச் சங்கிலியில் இதன் தாக்கத்தை உணரலாம். தொடர்ந்து அதிக வெப்பம் நீடித்தால் பொருட்களை உரிய நேரத்தில் உரிய இடத்தில் கொண்டு சேர்ப்பது சவாலாகும். இதன் மூலம் கிக் பொருளாதாரம் பாதிக்கப்படும் வாய்ப்பு உள்ளது, ஊதிய இழப்பு ஏற்படலாம் என அறிக்கை சுட்டிக்காட்டுகிறது. இதனை கருத்தில்கொண்டு, வெப்பத்தின் தீவிரத்தைப் பொருத்து வேலை நேரத்தை மாற்றியமைத்துக் கொள்ளலாம் என்றும் நிழல் இருக்கும் ஓய்விடங்கள் அமைத்துக் கொடுக்கலாம், குடிநீர் கழிவறை வசதிகள் ஏற்பாடு செய்துக் கொடுக்கலாம் என்றும் அறிக்கை பரிந்துரைக்கிறது.

வெப்ப அலையின் காரணமாக நிலத்தின் ஈரப்பதம் குறைகிறது. இதனால் பயிரிடும் பரப்பு குறைகிறது. இதுபோன்ற தாக்கங்களால், 2030ஆம் ஆண்டுக்குள், இந்தியாவின் வேளாண் மகசூல் 45% குறையும் என்று ரிசர்வ் வங்கியின் தரவு கூறுகிறது.

வெப்பம் அதிகரித்தால் தண்ணீர் தேவையும் சக்திக்கான தேவையும் அதிகமாகும். விவசாயம், கால்நடை வளர்ப்பு, வனம் சார்ந்த உற்பத்தி ஆகியவற்றை வெப்ப அலை பாதிக்கும். நிலத்தடி நீரை நம்பியிருக்கும் கோடைகாலச் சாகுபடி கடுமையான பாதிப்பை சந்திக்கும். தற்போது ஒவ்வொரு ஆண்டிலும் அதன் முந்தைய ஆண்டை விட அதிக பாதிப்பு நேரிடுகிறது.

இந்த சூழலை கணக்கில் கொண்டு தமிழ்நாடு விவசாயத்தில், அதிக வெப்பத்தை தாங்கும் பயிர்களை அறிமுகப்படுத்தலாம் என்றும், அந்த பயிர்கள் விவசாயிகளுக்கு லாபகரமானதாக இருக்க தேவையான சந்தை, கட்டமைப்பு வசதிகளை செய்ய வேண்டும் எனவும் திட்ட ஆணையத்தின் அறிக்கை பரிந்துரைக்கிறது.

இது மட்டுமல்லாமல், கால்நடை, மீன்வளம், வனத்துறை என பிற துறைகளில் ஏற்படும் பாதிப்பு குறித்தும் அறிக்கை பேசுகிறது. வெப்ப அலையை முன்னிட்டு தெலங்கானா மாநிலத்தில் அறிவிக்கப்பட்டுள்ள குளிர்ந்த மேற்கூரை திட்டம் 2028ஆம் ஆண்டுக்குள் 300 சதுர கி.மீ குளிர்ந்த கூரைகள் உருவாக்க வேண்டும் என்று இலக்கு கொண்டுள்ளது. இதனை குறிப்பிடும் தமிழ்நாடு மாநில திட்ட ஆணைய அறிக்கை, நமது பணியிடங்களில், வெப்பத்தின் தாக்கத்தை குறைக்க, குளிர்ந்த மேல் கூரைகள் மற்றும் பசுமையான மேற்கூரைகள் அமைப்பது, இயற்கையான காற்று மற்றும் வெளிச்சம் கொண்ட கட்டிடங்களை திட்டமிட்டு வடிவமைப்பது அவசியம் என்று பரிந்துரைக்கிறது.

காலநிலை மாற்றம் மிகவும் சிக்கலான விவகாரம். உலக அளவில் பொதுவாக அரசுகள், பாதிப்பு ஏற்பட்ட பிறகே அது குறித்து யோசித்து, பாதிப்புகளை குறைப்பது எப்படி என்று திட்டமிடுகின்றன. இதற்கு மாறாக, பாதிப்புகளை தவிர்ப்பதற்கு தேவையான முன் எச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். இப்போது பாதிப்பு இல்லையே, எதற்கு வீண் செலவு நினைத்தால், விளைவுகளை சந்திக்க வேண்டியிருக்கும். எனவே, மாநில திட்ட ஆணையத்தின் பரிந்துரைகளை அரசு கவனத்தில் கொள்ளவேண்டும். ●

# ஐந்தொகை

அ. முத்துலிங்கம்
ஓவியம்: George Keyt

சங்க இலக்கியதை சேர்ந்த வார்த்தைகள், எட்டுத்தொகை, குறுந்தொகை, கலித்தொகை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இதில் ஐந்தொகையும் ஒன்று என்று நான் பல நாட்களாக நினைத்திருந்தேன். கணக்காய்வு நிறுவனம் ஒன்றில் நான் பயிற்சிக்கு சேர்ந்தபோதுதான் எனக்கிருந்த சந்தேகம் தீர்ந்தது.

கொழும்பில் டியூக் தெருவில் இந்த நிறுவனம் அப்போது இருந்தது. பண்டாரநாயக்காவின் கொலை நடந்து, மூன்று மாதம் சென்ற பின்னர் கொழும்பு அமைதி நிலையை அடைந்தது. அந்தச் சமயம்தான் நான் வேலையில் சேர்ந்தேன். ஏறக்குறைய அறுபது பேர் அங்கே வேலை செய்தார்கள். பார்த்த உடனேயே இட நெருக்கடி இருப்பது தெரிந்தது. ஒரு மேசையில் இரண்டு பேர், நாலு பேர் என அமர்ந்து வேலை பார்த்தார்கள். என்னுடன் சேர்த்து பலர் அங்கே பயிற்சியில் இருந்தனர். அவர்களில் நானே ஆகக் கடைசி.

நோவல் என்பவன் என்னை அழைத்துப்போய் ஒரு மேசையில் உட்கார வைத்தான். அதில் ஏற்கனவே ஒரு பெண் அமர்ந்து வேகமாக தட்டச்சு செய்துகொண்டிருந்தாள். மேசையிலே முக்கால்வாசியை பிடிக்கும் நீளமான தட்டச்சு மெசின் அது. ஒவ்வொரு வரி முடியும்போதும் டைப்ரைட்டரின் உருளை வந்து என் தோளைத் தொட்டு மீளும். நானும் மனதை தளரவிடாமல் அந்த மேசையில் ஒரு மூலையை கைப்பற்றி என்னுடைய இடத்தை நிலைநாட்டினேன். நோவல் இரண்டு தொக்கையான லெட்ஜர்களை கொண்டு வந்து மேசையிலே எறிந்து தானங்களை கூட்டச் சொன்னான். என்னுடைய முதல் மூன்று மாத காலம் எனக்கு கூட்டல் பயிற்சிதான். அதற்கு அப்பாலும் தப்பி பிழைத்தால் வேறு வேலை கிடைக்கக்கூடும்.



இந்த நிறுவனத்துக்கு மூன்று பங்குதாரர்கள் இருந்தார்கள். மூத்தவரின் பெயர் விஜயரட்னா. கூடிய எலும்பும் குறைந்த சதையும் கொண்ட அவர் காலையிலே தன் அறையில் போய் அமர்ந்தார் என்றால் மதிய உணவு நேரம் வரைக்கும் அசையமாட்டார். மாறி மாறி சிகரட் பிடிப்பதால் ஒரு நிமிட நேரம்கூட புகை இல்லாமல் அந்த அறை இருந்ததில்லை. கடும்பிடியான மனிதர். அவர் அறைக்குள் காலடி எடுத்து வைக்க நடுங்குவார்கள்.

இரண்டாவது பங்குதாரர் பெயர் அலெக்ஸ். இவருடைய சிறப்பியல்புகள் மர்மம் நிறைந்தவை. தூர நாட்டில் இருந்து தகரக் குழாய் வழியாகக் கதைப்பதுபோல அவர் குரல் வளம் இருக்கும். எப்பொழுதும் அவர் அறையில் யாராவது ஒரு பயிற்சியர் மாட்டிப்போய் இருப்பார். நீண்ட பிரசங்கம் நடக்கும். அவர் தலைக்கு பின்னால் இருந்த கரும்பலகையில் அன்றைய சூரிய உதய, அஸ்தமன நேரங்களை குறித்து வைத்திருப்பார். இவர் செய்த வேலைக்கும் சூரியனுடைய வேலைக்கும் என்ன சம்பந்தம் என்பது ஒருவருக்கும் தெரியாது.

மூன்றாவது ஆள் மாக்சிம். இவரும்



இங்கிலாந்தில் படித்தவர். அதி புத்திசாலி. தானாகவே தேதி போட்டு படம் எடுக்கும் காமிராபோல இவர் ஒவ்வொரு சம்பவத்தையும் தேதியோடு ஞாபகம் வைத்து சொல்வார். நாலு வருடங்களுக்கு முன் இன்ன தேதியில் இந்த வாடிக்கையாளர் ரூ15,400 பணம் கட்டினார் என்பார். பழைய லெட்ஜர்களில் போய் தேடிப்பார்த்தால் அப்படியே இருக்கும். ஐந்து மணிக்கு அலுவலகம் மூடினாலும் இரவு பத்து மணி வரை அங்கேயிருந்து ரேஸ் புத்தகங்களை ஆராய்வார். இலங்கை குதிரைகளில் பணம் கட்டமாட்டார். எங்கேயோ இங்கிலாந்து தேசத்து குளிரில் ஓடும் குதிரைகள் மீது பந்தயம் கட்டுவார். ரேஸில் பணம் போட்டு பணக்காரர் ஆனவரை அப்பொழுதுதான் முதன்முறை நான் பார்த்தேன்.

நான் இருந்த மேசையின் சாவகாசமாக அமர்ந்து தட்டச்சு செய்த பெண்ணின் பெயர் ஈனா. கண்டிச் சிங்களவர் உடுத்தும் பாணியில் சேலை கட்டியிருந்தாள். வலது வயிற்றில் ஒரு சிறு கொய்யகம் வைத்து அதே பக்கத்து தோளில் மடித்து மடித்து தாவணியை நீட்டாக விட்டிருந்தாள். வேலைக்கு இடைஞ்சல் ஏற்படுத்தாமல் பதினெட்டு ஊசிகளால் சாரியையும் பிளவுஸையும் அந்தந்த இடங்களில் குத்திவைத்த சாமர்த்தியத்தால் அவள் உடம்பை ஊகிப்பது சிரமமாக இல்லை. காலையிலிருந்து ஒரு சிரிப்பை வெளியே விடாமல் கொடுப்புக்குள் அடக்கி வைத்திருந்தாள். அங்கேயிருந்த மற்ற பெண்களுடன் ஒப்பிடும்போது அவள் மிகவும் சாதாரணம். மெல்லிய சங்கிலி ஒன்றுகூட அலங்கரிக்கும் வாய்ப்பு பெறாத அந்த நீண்ட கழுத்து மெள்ள மெள்ள இறங்கி அவளுடைய தொண்டைக் குழியை கடந்து பிளவுசுக்குள் சென்று மறைந்தது. அப்படி மறைந்த பிறகும் எஞ்சியிருந்த கழுத்து தன் வசீகரத்தை குறைக்கவில்லை.

அவளுக்கு முன்னால், உயரத்தைக் குறைத்து ஒடுங்கியிருந்த என்னை அவள் நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை. ஒரு முனைப்புடன், இரண்டு கைகளாலும் விரித்துப் பிடிக்கவேண்டிய கணக்குகள் கொண்ட அகலமான தாளை அவள் டைப் அடித்துக் கொண்டிருந்தாள். அதன் பெயர் balance sheet என்றாள். 'தமிழில் அது ஐந்தொகை எனப்படும். வரவு, செலவு, கொள்முதல், வரவேண்டியவை, இருப்பு ஆகியவைதான் ஐந்தொகை. இதைப் புரிந்துகொள்ளும் அன்று நீ கணக்காய்வு நிபுணன் ஆகிவிடுவாய்' என்றான் நோவல். உண்மையான வார்த்தைகள். ஐந்தொகையின் நுட்பங்களை என்னால் இறுதிவரை புரிந்து கொள்ளவே முடியவில்லை.

முகம் தெரியாத யாரோ ஒருவர் தொட்டெழுதும் பேனாவினால் இரவிலோ பகலிலோ பாடுபட்டு எழுதி வைத்த லெட்ஜர் கணக்குகளை அன்று முழுக்க கூட்டிச் சரி பார்த்தேன். மற்றவர்கள் செய்வதுபோல ஒரு கூரான பென்சிலை வலது கையில் பிடித்திருந்தேன். எவ்வளவு பாடுபட்டும் கூட்டுத் தொகைகள் மாறவில்லை; ஐந்தும் மூன்றும் எட்டுத்தான். இரண்டும் ஏழும் ஒன்பதாகத்தான் வந்தது. ஈனா, கவனம் குலையாமல் விரல்களை தலைக்கு மேல் தூக்கி தூக்கி டைப் அடித்த வண்ணம்

**விஜயரட்னாவை எனக்கு பிடிக்காது என்ற முடிவை நான் அப்பொழுதுதான் எடுத்தேன். சரியாக மூன்று வருடம் கழித்து என் ஒப்பந்தக் காலம் முடிவுக்கு வந்தபோது விலகிக்கொண்டேன். இந்தக் காலகட்டத்தில் பல தடவைகள் என்னை அவருக்கும் அவரை எனக்கும் பிடிக்காமல் போனது. நான் நிறுவனத்தைவிட்டு வெளியேறினேன்.**

இருந்தாள். நான் அவளைப் பார்க்கவில்லை. அவளும் என்னைப் பார்க்கவில்லை. எங்கள் இரண்டு பேருக்குமான உறவு டைப்ரைட்டர் உருளை அடிக்கடி வந்து என் தோளை இடிப்பதோடு நின்றுபோனது.

மதியச் சாப்பாட்டின்போது எல்லோரும் கூட்டமாக மேசைகளைச் சுற்றி உட்கார்ந்து உணவருந்தினார்கள். பலர் வீட்டிலே இருந்துகொண்டு வந்திருந்தார்கள். இன்னும் சிலர் கடைகளிலே இருந்து எடுத்து வைத்து சாப்பிட்டார்கள். நான் இருந்த மேசையில் துணைக்கு ஒருவரும் இல்லை. என்ன நினைத்தாளோ அங்குமிங்கும் ஒருமுறை பார்த்துவிட்டு ஈனா என் பக்கத்தில் வந்து அமர்ந்தாள். என்னுடைய உணவு வீட்டிலே இருந்து சாப்பாட்டுக்காரனால் கொண்டுவரப்பட்டது. சைக்கிள் காரியரில் கட்டிய பெரிய பெட்டிகளில் அவை குலுங்கி குலுங்கி வருவதால் அன்றைய சாப்பாட்டில் எது சோறு, எது கறி, என்ன குழம்பு என்று சாப்பிட்டு முடிந்தபிறகும் என்னால் ஊகிக்க முடியாமல் போகும்.

ஒரு பிளேட்டை இன்னொரு பிளேட்டினால் மூடி, வெள்ளைத் துணியில் சுற்றிக் கட்டிய என் சாப்பாடு, விலாசம் எழுதிய சீட்டு தொங்க என் முன்னால் கிடந்தது. ஈனாவுடையது அவள் வீட்டில் இருந்து அவளே தயாரித்து கொண்டுவந்தது. அது சதுரமான ஒரு சின்னப் பெட்டியில் இருந்தது. அவள் அதன் மூடியை திறந்ததும் நாலு நாள் முன்பு இறந்துபோன ஒரு மீனின் வாசனை அடித்தது. கருவாடாகவும் இருக்கலாம். நான் என்னுடைய மேல் பிளேட்டை சிறிது தள்ளி துவாரம் செய்து நான் சாப்பிட உத்தேசித்த உணவில் சரி பாதியை கூச்சத்துடன் உண்டு முடித்தேன். ஈனா தன்னுடைய உணவை நாலே நாலு வாயில் முடித்துக்கொண்டாள்.

எங்கள் அலுவலகத்து பாத்ரூம் கதவில் ஆண், பெண் உருவம் பொறிக்கப்பட்டிருக்கவில்லை. எழுத்தும் இல்லை. தட்டி மறைவில் மூன்று கறுப்பு கதவுகள் பக்கத்து பக்கத்தில் இருந்தன. அதிலே ஒன்றுதான் பாத்ரூம் கதவு. ஆணும் பெண்ணும் அதையே பாவித்தார்கள். எல்லோரும் உள்ளே போனார்கள்;வந்தார்கள். அந்த முழு அலுவலகத்திலும் எனக்கு தெரிந்த, கனிவாகப் பேசும் ஒரேயொரு ஜீவன், ஈனாதான். நான் எழும்புவதும் இருப்பதுமாக அந்தரப்படுவதை. தன் வட்டக் கண்களால் அவதானித்த ஈனா என்னைப் பார்த்து 'அதுல, அதுல' (உள்ளே, உள்ளே) என்றாள். என்னுடைய மனதைப் படிக்கும் கெட்டிக்காரத்தனம் அவளிடம் இருந்தது. நான் சரியான கதவைக் கண்டுபிடித்து உள்ளே நுழைந்தேன். அவள் இதழ்களை விரித்து 'அதுல அதுல' என்று சொன்ன விதம் இனிமையாக இருந்தது. அன்று பின்னேரம் அலுவலகம் மூடுவதற்கிடையில் அவளை இன்னொருமுறை எப்படியும் அதைச் சொல்ல வைத்துவிடவேண்டும் என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டேன்.

மதியச் சாப்பாடு முடிந்த சிறிது நேரத்தில் விஜயரட்னாவின் மனைவி தன் இரண்டு பிள்ளைகளையும் பள்ளிக்கூடத்தில் இருந்து அழைத்துக்கொண்டு நேராக அலுவலகத்துக்கு வந்தார். பிள்ளைகளுக்கு வயது 5, 8 இருக்கும். சீருடையில் கொழுகொழுவென்று இருந்தார்கள். மனைவி சிவப்பாக, மிகையான சதையுடன் உயரமாக இருந்தார். கைகள் நீக்கிய பிளவுஸ் அணிந்திருந்தார். பிடரியோடு நிறுத்தப்பட்ட தலை மயிர் பின்னாலே அலைய, நாலு குதிரைகள் நுழைந்துவிட்டன போன்ற பெரும் சப்தத்தை மரத்தரையில் எழுப்பியபடி நடந்துவந்தார். அவர் விஜயரட்னாவின் அறையை அணுக எடுத்துக்கொண்ட ஒரு முழு நிமிடமும் அந்த அலுவலகத்தில் ஒருவரும் வேலை செய்யவில்லை.

விஜயரட்னாவின் மனைவி திரும்பியதும் நோவல் கண்களில் சிரிப்புடன் ஈனாவை அணுகினான். 'இதுதான் அருமையான சந்தர்ப்பம். விஜயரட்னா சிரித்த சத்தம் எனக்கு கேட்டது. அவர் நல்ல மூடில் இருக்கிறார். உடனேயே நீ போனால் அவர் ஐந்தொகையில் கையொப்பம் போட்டுவிடுவார். ஓடு ஓடு' என்று ஈனாவை அவசரப்படுத்தினான். அவளோ தலை நிமிராமல் ஆறு கார்பன் தாள்கள் வைத்த டைப்ரைட்டரில் ஓங்கி ஓங்கி குத்தினாள். ஏழாவது நகல் மங்கலாக வந்தால் இன்னொருமுறை தட்டச்சு செய்யவேண்டி வரும் என்ற பெரும் கவலை அவளுக்கு.

ஒரு புகைமூட்டம் எழும்புவதுபோல, மெல்ல அவசரமில்லாமல் ஈனா எழுந்து நின்றாள். அவளுடைய வியர்வை வட்டமாகி இரண்டு அக்குள்களையும் கறுப்பாக்கியது. தன்னுடைய இடது கை சின்னிவிரலால் கொய்யகத்தையும் பக்கவாட்டுகளை மறைக்காத சாரி போர்டரையும் சுண்டினாள். என் கண்ணுக்கு படாத தூசியை அவள் கண்டிருந்தாள். அன்று முழுக்க அவளுக்கு முன் உட்கார்ந்திருந்தாலும் அப்பொழுதுதான்

முதல் தடவையாக அவளுடைய நின்ற உருவத்தை நான் பார்ப்பது. வாடிக்கையாளரின் கோப்பு, தான் டைப் செய்த ஐந்தொகை, லாப நட்டக் கணக்கு, அறிக்கைகள் என்று பல சாமான்களை சேகரித்து ஏதோ தூர வழிப் பயணிபோல விஜயரட்னாவின் அறையை நோக்கி நடந்தாள். மாறி மாறி சிகரட் பிடித்தபடி கண்ணாடி கதவின் பின்னால் அவர் இருப்பது தெரிந்தது. ஐந்தொகையில் கையொப்பம் வாங்கி வாடிக்கையாளருக்கு அனுப்பவேண்டிய கடைசித் தேதி அது. பித்தவெடிப்பு குதியை வார் கவ்விப்பிடிக்கும் மலிவு செருப்பை அணிந்துகொண்டு பாதி தூரம் போனவள் ஏதோ நினைத்து மீண்டும் திரும்ப வந்தாள்.

டைப் செய்த balance sheet கூட்டல் தொகையை மீண்டும் ஒருமுறை சரி பார்க்க முடியுமா என்றாள். டைப் செய்வதற்கு முன்னர் இந்தக் கூட்டல் தொகை சரி பார்க்கப்பட்டிருந்தது. ஆனால், தட்டச்சு செய்யும்போது பிழைகள் ஏற்பட்டிருக்கலாம். அன்றைய கடும் பயிற்சியில் என்னுடைய மூளை கூராக இருந்தது. பென்சிலும் கூராக இருந்தது. அதைக் கையில் பிடித்தபடி வேகமாக புதிதாக அச்சடித்த தானங்களைக் கூட்டினேன். என்னுடைய வாழ்க்கையின் முழு எதிர்காலமும் இதிலேதான் தங்கியிருக்கிறது என்பதுபோல கவனத்துடன் சரி பார்த்தேன். ஒன்பது ரூபா வித்தியாசம் விழுந்தது. ஈனாவின் கால்கள் தரையில் நிற்காமல் பரபரத்தன. ஒவ்வொரு எண்ணாக செக் பண்ணியபோது ஓர் இடத்தில் 56 என்பதற்கு பதிலாக 65 என்று ஈனா தானங்களை மாற்றி அடித்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

ஐந்தொகைக் கணக்கில் பிழை திருத்துவது என்பது பெரிய தொல்லை பிடித்த வேலை. ஒவ்வொரு தாளாக ஏழு தாள்களிலும் அந்த தானத்தை அழி ரப்பரினால் அழிக்கவேண்டும். பிறகு தனித்தனியாக தாளை டைப்ரைட்டர் உருளையில் மாட்டி சரியான இடத்துக்கு உருட்டி கொண்டுவரவேண்டும். மேலேயோ கீழேயோ பக்கவாட்டிலோ போகாமல் தானத்தை சரியாக அடிக்கவேண்டும். இப்படி ஏழுதரம் செய்யவேண்டும். இந்த விவகாரத்தில் ஒரு விதத்திலும் சம்பந்தப்படாத நான் தூக்கு தீர்க்கப்பட்டவன் கடிகார முள்ளைப் பார்ப்பதுபோல அடிக்கடி நேரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தேன். இறுதியில் ஒருவாறாக ஈனா பிழையை திருத்தி அடித்து முடித்தாள். அச்சடித்த தாள்களை எல்லாம் ஒழுங்குபடுத்தி, அறிக்கைகளையும் தூக்கி ஒரு குழந்தையை அணைப்பதுபோல நெஞ்சோடு பிடித்துக்கொண்டு விஜயரட்னாவின் அறையை நோக்கி புறப்பட்டாள். மத்தியானம் நான் சாப்பிட்ட உணவு வாய் வரைக்கும் வந்து அதன் ருசியை ஞாபகப்படுத்திவிட்டு திரும்பிப் போனது. நான் ஈனாவை பார்த்தேன். அந்த அவசரத்திலும் என்னை கனிவோடு திரும்பி பார்த்து 'போமஸ்துதி' என்றாள். அவள் உதடுகளில் இருந்து பிரிந்த வார்த்தைகள் என்னிடம் மெதுவாக வந்தன.

விஜயரட்னாவை எனக்கு பிடிக்காது என்ற முடிவை நான் அப்பொழுதுதான் எடுத்தேன். சரியாக மூன்று வருடம் கழித்து என் ஒப்பந்தக் காலம் முடிவுக்கு வந்தபோது விலகிக்கொண்டேன். இந்தக் காலகட்டத்தில் பல தடவைகள் என்னை அவருக்கும் அவரை எனக்கும் பிடிக்காமல் போனது. நான் நிறுவனத்தைவிட்டு வெளியேறினேன். அங்கே பயிற்சி பெற்ற சமயத்தில் என்னுடைய மாதச் சம்பளம் ரூ 44; அதாவது நாளுக்கு இரண்டு ரூபா. அப்பொழுதெல்லாம் தள்ளு வண்டிக்காரன், நாளுக்கு ஐந்து ரூபா சம்பாதித்தான். அங்கே உழைத்ததற்கான ஒரேயொரு அத்தாட்சி என்னுடைய ஒப்பந்தம் முடிந்தபின்னர் கிடைத்த கடிதம்தான். இதை எழுதும்போது அது என் முன்னே கிடக்கிறது. அதன் தேதி 13. 06. 62. விஜயரட்னாவின் கையொப்பம் மங்காமல் கறுப்பு எழுத்தில் தெரிகிறது. அந்தக் கறுப்பு மை விஜயரட்னாவின் ஆயுளை தாண்டி இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

பல வருடங்கள் கழித்து நான் ஆச்சரியமான ஒரு செய்தி கேள்விப்பட்டேன். நான் நிறுவனத்தை விட்டு விலகிய சில மாதங்களிலேயே விஜயரட்னாவை ஈனா திருமணம் செய்துகொண்டாள். மரத்தரையில் குதிச்சப்பாத்து சத்தம் போட நடந்து வந்த அவருடைய மனைவியை விஜயரட்னா மணவிலக்கு செய்துவிட்டு ஈனாவை மணந்துகொண்டார். காதல் திருமணம் என்று சொன்னார்கள். சதுரமான சாப்பாட்டு பெட்டி உணவை நாலே வாயில் சாப்பிட்டுவிட்டு 'அதுல அதுல' என்று அவள் என்னிடம் சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. மணம் முடித்த பிறகு, வேறு ஓர் இடத்தில், வேறு ஒரு தருணத்தில் இனிமையான சத்தம் எழுப்பும் 'அதுல, அதுல' என்ற வார்த்தைகளை அவள் சொல்லியிருக்கலாம் வேறு அர்த்தத்தில்.

அடிக்கடி விரல்களால் சரி பார்க்கும் தொந்தரவு இல்லாமல், 18 பின்களைக் குத்தி சாரியையும் பிளவுஸையும் ஒரே இடத்தில் நிறுவி வைக்கும் ஈனா, balance sheetஐ தூக்கிக்கொண்டு அந்த முதல் நாள் கையொப்பம் வாங்கப் போன காட்சியை என்னால் மறக்க முடியவில்லை. இரண்டு மடங்கு வயதான விஜயரட்னாவிடம் அவளுக்கு எப்போது காதல் உண்டாகியது? ஒரு சிகரட் புகைந்தபடி கிண்ணத்தில் கிடக்க, இன்னொரு சிகரட்டை மறதியாகக் கொளுத்தும் விஜயரட்னாவின் முன்னால் பேப்பர்கள் பறக்க, கோப்புகளைக் காவிக்கொண்டு நடுங்கியபடி அவர் கையொப்பத்துக்காக காத்து நின்றபோதா? எப்படித்தான் மூளையைப் போட்டு கசக்கினாலும் விளங்கிக்கொள்ள முடியாத சிக்கலான ஐந்தொகைக் கணக்கு இதுதான்.

அ. முத்துலிங்கம் <amuttu@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

41 நேர்

காதலி!

யாமத்து வானில் காட்டு
முந்திரிக்கொடியெனப் படர்ந்திருக்கும்
விண்மீன்கள்
இரவின் தழற் கண்களாய் மினுங்க
ஒய்யார ஓடையொன்று தவழ்வதுபோல்
படுத்திருக்கும்
வனதேவதை நீ

உன் எழிலுக்கு நியாயம்செய்ய
ஈடாக எதை நான் வைத்தாலும்
உன் அன்பின் ருசியருந்திய பின்
அத்தனையும்
ஒளியைப் பிடித்து
இரவுப் பேழைக்குள் அடைக்கிற
அபத்தமாக இருக்கிறது.

துரோகக் கூர்வாளின் நுனி
ஆழப் பாய்ச்சிய
நட்பின் கைகளை அதிர்ந்து பார்த்து
பக்கவாதத்தில் படுத்த மனதை
மதுச் சாலைத் தேறல் ஏந்திய
சிறு குவளைகள்
என நான் அதுவரை நினைத்திருந்த
உன் உதடுகள் வழியே
அமுதூட்டித் திடமாக்கி
மீண்டும் என்னுயிருக்கு
உரமேற்றியவளின் காதலுக்குச் சமமாக
எதைத் தர.



உன் கண்கள் இரு நேசக் கடத்திகள்
அதன் சிமிட்டலில்
சிந்துகிற சின்னஞ்சிறு
பிரியமான சமிக்ஞைகளை
வைத்துக்கொண்டே கழித்துவிட
முடியும்
இந்தப் பொருள்வயிற் பிரிவின்
தரிசு வாழ்வை
ஆனால்
அவற்றுடன் பேரம் பேசி
விடுமுறையில் நானுன் கழுத்தில்
இட்ட பசும்பொன் சங்கிலிகளைப்
பார்த்து
அவை கெக்கலிப்பது
இரவுகளில் எனக்கே இங்கு கேட்கிறது.
மறுபடி தோற்கிறேன்

மலையுச்சி மேகங்கள் பொழிகிற
தூறலின் பிஞ்சு விரல்களைப்
பிடித்தபடி
அடிவாரத்தில் பூத்திருக்கிற
சூரியகாந்தி வயலொன்றை
நோக்கிச் செங்குத்தாக இறங்குவதாய்க்
கூடலுக்கு முன்னான என்
சாகசங்களை நிகழ்த்தி நான் களித்துக் கிடக்க
மந்தகாசமாய்ப் புன்னகைத்து
இருவரும் வென்றதாய்
சமக் குறியொன்றை இடுகிறாய்
உன் நீண்ட முத்தத்தால்.

தொடரும்

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# தாமரை பாரதி கவிதைகள்

## உடைமை

குழந்தைகளை
உங்களுக்குப் புரியாததைப்போலவே
உங்களையும் உங்கள்
குழந்தைகளுக்குப் புரிவதில்லை

குழந்தைகளின் மனக் கஷ்டங்களை நீங்கள்
புரிந்து கொள்ளாததைப்போலவே
குழந்தைகளும் உங்கள்
மனக் கஷ்டங்களைப் புரிந்துகொள்வதில்லை

இருப்பினும் பல நேரங்களில்
நீங்கள் சேர்ந்து மகிழும்
காலங்களைக் கடந்து போகிறீர்கள்

இருப்பினும் பல நேரங்களில்
நீங்கள் பிரிந்து வருந்தும்
காலங்களைக் கடந்து போகிறீர்கள்

குழந்தைகள் உங்களிடம்
ஒருபோதும் கேட்டதேயில்லை
உங்களை அவர்களுக்குப்
பெற்றோர்களாயிருங்களென்று

நீங்கள்தான்
என் குழந்தை
என் மகள்
என் மகன்
என...



## சுதந்திரம்

வெறுப்பவர்களிடமிருந்துதான்
வாழ்வின் இருளடைந்த
சூன்யத்தின் சாகசங்களை
முறியடிக்கும் சாகச வித்தைகளைக்
கற்றுக்கொள்ள முடிகிறது;
விரும்புகிறவர்களிடமிருந்துஅல்ல.

விரும்புகிறவர்களிடமிருந்தும்
கற்றுக்கொள்ளவும் ஒன்று இருக்கிறதே
பிறரது சுதந்திரத்தைக்
கைக்கொள்ளலாகாது என்பதை.

## பாஸ்வோர்டு

யாருடன் யார் இருப்பினும்
விலகியிருத்தல் மற்றும்
தனித்திருத்தலின் வழியாக
மர்மத்தின் ரகசிய கதவுகளை
எப்போதும் திறக்க முடியாதபடிக்கு
மூடியே வைத்திருக்கும்
சாதாரணர்கள்தானே நாம்.

**தாமரைபாரதி**
<thamaraibharadhi@gmail.com>

# உப்பு வண்டிக்காரன்

**இமையம்**

மருத்துவக் கல்லூரி மாணவர் விடுதியை விட்டு கவர்னர் வெளியே வரும்போது முற்றிலுமாக விடிந்திருக்கவில்லை. அறையை விட்டு வெளியே வந்ததே அவனுக்குப் பரவாயில்லை என்றிருந்தது. அறையில் மின்விசிறி ஓடினாலும் ஒரே வெக்கைதான். வெளியில் அனல் காற்று இல்லை. குளிர்ந்த காற்று பட்டதும் உடம்பில் ஒருவிதமான மாற்றம் ஏற்பட்டது. நன்றாகக் காற்று படட்டும் என்பதுபோல சட்டையின் இரண்டு பட்டன்களைத் திறந்துவிட்டான்.

கவர்னர் நடந்துகொண்டிருந்தான். அவனுடைய நடையில் எந்த அவசரமுமில்லை. அவன் நடந்துகொண்டிருந்த விதம் ஒரு நாளிலேயே கிழவனாகிவிட்டதுபோல் இருந்தது.

கவர்னர் மருத்துவமனைக் கட்டடத்தின் கேட்டிற்கு அருகில் வரும் போது சூரியன் வந்துவிட்டிருந்தது. மருத்துவமனைக் கட்டடமும் அதனைச் சுற்றியிருந்த மரம், செடிகளும் சூரிய ஒளியில் மின்னின. கேட் பூட்டப்பட்டிருந்தது. காவலர் இல்லை, கேட்டிற்குள்ளே ஆள் நடமாட்டம் இல்லை. பாழடைந்த



கட்டடத்தைப் பார்ப்பதுபோல் மருத்துவமனைக் கட்டடத்தையே பார்த்துக்கொண்டிருந்தான். ஆட்கள் யாராவது வெளியே வருகிறார்களா? என்று பார்த்தான்.

மருத்துவக் கல்லூரி மாணவர் விடுதியில் இருப்பதைவிட, மருத்துவமனையில் இருப்பது பாதுகாப்பானது என்று நம்பித்தான் சண்முகத்தை அனுப்பிவைத்தான். முத்து கருப்பாயியையும் அனுப்பிவைத்தான். அந்த நம்பிக்கை இப்போது அவனிடமில்லை. "ஆஸ்பத்திரிக்கிப் போறதுங்கிறதே செத்துப்போறதுக்கா?" தன்னிடமே கேட்டுக்கொண்டான். 'உயிருடன் இருப்பது பெரிது அல்ல, செத்துப் பிணமாக இருப்பதும் பெரிது அல்ல, இரண்டுக்கும் இடையில் இருப்பதுதான் பெரிது' என்று நான்கு நாட்களுக்கு முன்பு வாட்ஸ்அப்பில் வந்த செய்தி நினைவுக்கு வந்தது. பெருமூச்சு விட்டான்.

கலாவிடமிருந்து போன் வந்தது. முதல் கேள்வியாக, "எங்க இருக்க?" என்று கேட்டாள்.




"ஆஸ்பத்திரிக்கு முன்னால." உயிரற்ற குரலில் கவர்னர் சொன்னான்.

"ஒங்கம்மாகிட்ட சொல்லிட்டியா?"

"இல்ல."

"ஒங்கம்மாவுக்கு விஷயம் தெரியுமா?"

"ஆஸ்பத்திரியில சொன்னாங்களா இல்லியானு தெரியல."

"சொல்லிடாத. ஒனக்குப் புண்ணியமாப் போகும். ஒங்கம்மாவும் ஒங்கப்பாவும் எப்பிடி இருந்தாங்கன்னு ஊருக்கே தெரியும். ஒரு நாளும் பிரிஞ்சி இருந்ததில்ல. சேதி தெரிஞ்சா ஒங்கம்மா நெஞ்சடப்பு வந்து செத்திடும். ஒரே நாளில வீட்டுல ரெண்டு பொணத்தத் தூக்க முடியாது" என்று சொல்லி கலா அழ ஆரம்பித்தாள். 'அழுவாம இரு' என்றோ, 'எதுக்கு அழுவுற' என்றோ, 'அழுவறதுக்கான நேரமா இது?' என்றோ ஒரு வார்த்தை சொல்லவில்லை, கவர்னரின் கையிலிருந்த போன் பிடிமானமின்றித் தரையில் விழுந்தது. தரையில் விழுந்த போனைப் பார்த்தான். போனிலிருந்து கலா அழுகிற சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. அப்போது, 'தமிழ்நாடு அரசு' என்று எழுதியிருந்த இரண்டு ஜீப்புகள் ஒன்றன் பின் ஒன்றாக வந்தன. ஜீப்புகளின் ஹாரன் சத்தம் கேட்டு காவலர் ஒருவர் ஓடி வந்து கேட்டைத் திறந்துவிட்டார். ஜீப்புகள் உள்ளே சென்றதும், அவசரமாக கேட்டைப் பூட்டினார். காவலரிடம் பேசுவதற்காக கவர்னர் முயன்றான். அவர் வேகமாக மருத்துவமனைக் கட்டடத்தை நோக்கி ஓடிவிட்டார்.

சந்திரனிடமிருந்து போன் வந்தது. "எங்க இருக்கிற?" என்று கேட்டதற்கு உப்புச்சப்பற்ற குரலில், "ஆஸ்பத்திரிக்கு முன்னால" என்று சொன்னான். பிறகு காவலர் வெளியே வருகிறாரா என்ற பார்க்க ஆரம்பித்தான்.

சந்திரனும் வடமலையும் வந்தனர். வந்த வேகத்தில், "எதுக்கு வந்து தனியா நிக்கிற? எங்களையும் கூப்பிட்டிருக்கலாமில்ல?" என்று கேட்டு வடமலை கோபித்துக்கொண்டான்.

"தோணல." கவர்னர் சத்தமில்லாமல் சொன்னான். சிறிது நேரம் கழித்து, "மனுஷன் யாருனு, எப்படிப்பட்டவனு சாவுதான் சொல்லித் தருது. காட்டிக்கொடுக்குது" என்று சொன்னான்.

"கொரானா வந்து நெறைய பேர சாவு குழிக்கு அனுப்பிடுச்சி. பயம்தான் பாதி பேர சாவடிக்குது. நாம்ப தங்கியிருக்கிற எடத்துக்கு கொரானா வராதவன் வந்தான்னாக்கூட வந்திடும். பயம்தான் கொரானா. பயம்தான் சாவக் கொண்டாருது. நீ மட்டுமில்ல, நான் மட்டுமில்ல, இன்னிக்கு ஒலகமே இப்பிடித்தான் இருக்கு. பயத்தில, கவலையில, தனிமையில செத்துப்போறாங்க. பஞ்ச காலத்தில, கொள்ள நோவு காலத்தில கொத்துக்கொத்தா சனங்க செத்தாங்கன்னு கேள்விப்பட்டிருக்கம். நம்ப காலத்தில கொரானா வந்திருக்குது. நம்ப கண்ணால பாக்குறம் சனங்க செத்துப்போறத. நேத்து ராத்திரி யூடியூப்ல பாத்தன். எந்த நாடுனு பேரு மறந்து போச்சி. லாரிலாரியாக் கொண்டாந்து பெரிய பள்ளத்தில பொணத்தக் கொட்டுறான். பொட்டலம் மாதிரி ஒவ்வொரு பொணமும் குழியில விழுறதப் பாக்கவே முடியல. மனசுக்குக் கஷ்டமா இருக்கு. எதுவும் செய்ய முடியாது. உசுரோட இருக்கவங்க செத்துபோனவங்களப் பொணமா வேடிக்க பாக்கலாம். அவ்வளவுதான்."

வடமலை மேடைப் பேச்சாளர் மாதிரி பேசிக்கொண்டிருந்ததைக் கவனிக்காத கவர்னர் தனக்குத் தானே சொல்லிக்கொள்வதுபோல சொன்னான்: "எங்கப்பா யாருனு நேத்து ராத்திரிதான் எனக்குத் தெரிஞ்சிது. எங்கப்பா சின்ன வயசிலிருந்தே கஷ்டப்பட்ட ஆளு. வேல செய்யணும், அதுதான் அவருக்குச் சோறு. உசுரு. வேல செய்ய விடாம ஒக்கார வச்சதாலதான் செத்திட்டாரு. இல்லன்னா எங்கப்பா இப்ப சாவுற ஆளில்ல."

"இப்ப எதுக்கு அதையும் இதையும் பேசிக்கிட்டு இருக்கிற? இனிமே நடக்க வேண்டிய வேலயப் பாரு.

உப்பு வண்டிக்காரரப் பத்தி நீ சொல்லித்தான் நாங்க தெரிஞ்சிக்கணுமா? நல்ல மனுஷன்னு ஊருக்கே தெரியும்" என்று சந்திரன் சொன்னான்.

சந்திரன் சொன்னதைக் காதில் வாங்கிக்கொள்ளாத கவர்னர் தன் போக்கில் பேசினான்: "'பாக்கிறதுக்கு மரம்தான். ஆனா, அதுல இருக்கிற எல தனிதான். வேர் தனிதான். காய் தனிதான். கிளை தனிதான். என்னதான் புருசனும் பொண்டாட்டியுமா இருந்தாலும், அப்பனும் புள்ளையுமா இருந்தாலும் வயிறு தனிதான். உயிர் தனிதான். சாவு தனிதான். இதான் ஒலகம். இதான் வாழ்க்க. பாத்து இருந்துக்க. மன பாரம் வராம பாத்துக்க'னு எத்தன மொற எங்கிட்ட எங்கப்பா சொல்லியிருக்காரு. அப்பல்லாம் எனக்குப் புரியல. இப்ப புரியுது."

"இப்ப அழுவுற நேரமாடா?" கொஞ்சம் சத்தமாகக் கேட்டான் வடமலை.

"இத்தினி வருசத்தில இன்னிக்கித்தான்டா நான் மனுஷனா அழுவுறன்" என்று கவர்னர் சொன்னான்.

"உள்ளார போறப்ப உசுரோட போனாரு. திரும்பி வருவாருனு இருந்தன். பொணமாயிட்டாரு. அவர இனிமே எப்ப உசுரோட பாப்பன்? எங்கப்பாவோட கதெ இன்னியோட முடிஞ்சிபோச்சி. வண்டியும் மாடும் உப்பு மூட்டயும்தான் அவரோட ஒலகமா இருந்துச்சி. வாழ்க்கயா இருந்துச்சி. இருபது வயசில உப்பு மூட்டயத் தலையில சொமக்க ஆரம்பிச்ச ஆளுதான். வெயிலு அடிச்சாலும் மழ அடிச்சாலும் வீடு தங்க மாட்டாரு. உப்பு மூட்டய ஏத்திக்கிட்டு, எங்கம்மாவ இழுத்துக்கிட்டு வண்டியப் பூட்டிக்கிட்டு கிளம்பிடுவாரு. ராவா இருந்தாலும் பகலா இருந்தாலும் அவருக்கு வேல செய்யணும். வேல செஞ்சாதான் உசுரோட இருக்கம்னு அர்த்தம் அவருக்கு." கவர்னர் ஏதேதோ சொல்லிப் புலம்பி அழுதுகொண்டிருந்தான். இத்தனை வருடத்தில் ஒருநாள்கூட, ஒரு வார்த்தைகூட மனம் விட்டு அவன் சண்முகத்தைப் பற்றி நல்ல விதமாகவும் சொன்னதில்லை, கெட்ட விதமாகவும் சொன்னதில்லை.

"'தொட்டதும் பட்டென உடையுங்குமிழ் கை
பட்டதும் கலங்குநீர் வட்டக்குளம் உயிர்
விட்டதும் சில்லிடும் ஊனுடல் மனம்
கெட்டதும் மாயை மாயை மகாமாயையே'னு

நீ சொல்றதத்தான்டா திருக்கோவிலூர் கார்த்திகைச் சித்தர் பாடி வச்சியிருக்கான்." வடமலை சொன்னது கவர்னரின் காதில் விழுந்ததுபோல் தெரியவில்லை.

முன்பு உள்ளே போன இரண்டு 'தமிழ்நாடு அரசு' ஜீப்புகள் ஒன்றன் பின் ஒன்றாக வெளியே வந்தன.

'நான் முன்னபின்ன தெரியாத ஒரு வீட்டுல படுத்துக்கிட்டிருக்கன். பெரிய வீடாத் தெரியுது. பழைய காலத்து வீடு மாதிரி நெறைய மரத்தூண்லாம் இருக்கு. காய்ச்சல் கண்டவன் மாதிரி புரண்டுகூடப் படுக்க முடியாம கெடக்குறன். 'என்னடா ஆச்சி'ன்னு கேட்டுக்கிட்டு எங்கம்மா வருது. அதோட கையில ஒரு காமாட்சியம்மன் விளக்கு இருக்கு. அது நடந்து வர்றத பாத்தா இருட்டுல இருக்கிற பொருளத் தேடிக்கிட்டு வந்த மாதிரி இருக்கு. விளக்கு வெளிச்சத்தில எங்கம்மா மொட்ட போட்டிருக்கிறது தெரியுது. எங்கம்மா எதுக்கு மொட்ட போடணும்? எனக்கு அதிர்ச்சியா இருக்கு. என் பக்கத்தில நின்னுகிட்டு என்னையே பாக்குது. அதோட கண்ணு ஆந்தையோட கண்ணு மாதிரி தெரியுது. ஆடல, அசையல. கல் சிலையா எங்கம்மா நிக்குது.

'பைத்தியமா புடிச்சியிருக்கு. எதுக்குச் சீல கட்டாம வந்த?' நான் கோவமாக் கத்துனன்: 'போயித் துணியக் கட்டு.' 'நீ செஞ்சதவிட நான் செய்றதா பெருசு?'னு எங்கம்மா கேக்குது. 'நான் என்னா செஞ்சன்? மொதல்ல தூரப்போ'ன்னு கத்துனன். 'போறன்'னு சொல்லிட்டு வாசல பாத்துப் போச்சி. 'இந்தக் கோலத்தில வாசலுக்குப் போவாத'ன்னு சொல்லிக் கத்துனன்.

நல்ல இருட்டு. எங்கம்மா தெரியல. விளக்கு வெளிச்சம் மட்டும்தான் தெரிஞ்சிது. அப்பறம் அதுவும் தெரியல. வேகமா எந்திரிச்சி ஓடிப் போயி எங்கம்மாவ மறிக்கணும்னு தோணுச்சி. என்னால எந்திரிக்க முடியல. புரண்டுபடுக்க, அசையக்கூட முடியல. என்னெத் தரையோட தரையா எதையோ போட்டு ஒட்டிட்ட மாதிரி இருக்கு. 'ஐயோ'னு சொல்லித் தலையில அடிச்சிக்கிட்டன். எங்கம்மா நிர்முண்டமாத் தெருவுக்குப் போறத என்னால தாங்கிக்க முடியல. எங்கம்மா நல்ல கருப்பு, பெருத்த ஒடம்பு. மார்பகங்களும் பெருசாப் பெருத்து இருக்கும். எங்கம்மாவ யாராவது திட்டுனா அதோட மார்பகங்களச் சொல்லித்தான் திட்டுவாங்க. அந்த அளவுக்குப் பெருசு. மேசட்ட இல்ல. இடுப்புல ரவ துணியில்ல. தெருவுல போனா சனங்க எம்மாம் திட்டுமோங்கிற கவல. பட்டுன்னு எந்திரிச்சன்.'

தூக்கத்திலிருந்து சட்டென்று திடுக்கிட்டு எழுந்த கவர்னர் எழுந்து வந்து ஸ்விட்சைப் போட்டான். வெளிச்சத்தில் அறையைப் பார்த்தான். அது எப்போதும்போல் மக்கல் வாடையுடன் இருந்தது. கழிப்பறைக்குப் போய்ச் சிறுநீர் கழிக்கும்போது சுவற்றைப் பார்த்தான். ஏதோ பென்சிலால் கிறுக்கியிருப்பது தெரிந்தது. படித்தான்.

'பயணம் தொடர்கிறது, பாதை நீள்கிறது.'

இமையம் imayam.annamalai@gmail.com

---

**வெளியீடு; க்ரியா, 58 TNHB காலனி, சானடோரியம், தாம்பரம், சென்னை – 600 047; கைபேசி: +91-72999-05950; மின்னஞ்சல்:** crea@crea.in; **இணையதளம்** www.crea.in; **விலை ரூ. 350**

# ஹரணி கவிதைகள்

## கோடை வெண்பா

1
இளநீரும் நுங்கும் இனிக்கும் தணியா
உளமும் உணரும் உயிரோ - இளகுமே
பானையின் நீரும் பருகிடத் தேகமோ
தானையை வென்றிடத் தாவும்.

2
மோரும் களியும் மணக்கும் மிளகாயும்
சேரும் சுவையின் சுகத்தில் - ஊரும்
கடுங்கோடையும் குறையும் களிப்பே
விடுப்பைச் சுவைக்க விரும்பு.



3
இருவேளை நீராடி இன்புறப் போர்த்தி
ஒருவேளை உண்டே ஒருவாய்ப் - பருகிடக்
கோடை வருத்தவும் கூடுமோ கனிவாழ்வு
சோடை போகுமோ சொல்.

## விருந்தாளிகள்

முன்பொரு சமயம் அந்த வீடு வீடாக இருந்தது.
அழகாகவும் பாந்தமாகவும் இருந்தது.
அப்பாவும் அம்மாவும் சக உறவுகளும்
நன்றாக இருந்தன.
வெள்ளந்தியாகப் பேசி சிரித்து களித்து
உண்டு களைத்துக் கிடந்தார்கள்.

கண்பட்டதுபோல விருந்தாளிகள் என்று
சொல்லி வந்தார்கள்
வந்தவர்கள் வன்முறையை விருந்தாகக்
கேட்டார்கள்.
பழக்கமில்லாத வீடு பரிதாபமாக விழித்தது.
நாங்களே கற்றுத் தருகிறோம் என்றார்கள்
அதெல்லாம் வேண்டாம் பழக்கமில்லை
என்றதும்
பழகிக்கொள்ளவேண்டும் என்று
வன்முறை காட்டினார்கள்.

இப்போது விருந்தாளிகள் அடிக்கடி
மாறினார்கள்
இப்போது விருந்தாளிகள் மட்டுமே
வீட்டில் இருந்தவர்களோ
என்றைக்கோ விருந்தாகியிருந்தார்கள்.

**ஹரணி** <thanjavurharani@gmail.com>

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

2006

ஓரான் பாமுக் | Orhan Pamuk

# என் தந்தையின் கைப்பெட்டி

**தமிழில்: ஸிந்துஜா**

என் தந்தை இறப்பதற்கு இரு வருடங்கள் முன்பு அவருடைய கையெழுத்துப் பிரதிகளும் சில நோட்டுப் புத்தகங்களும் அடங்கிய ஒரு சிறிய கைப்பெட்டியை என்னிடம் தந்தார். வழக்கம் போல அவருடைய கேலி நிரம்பிய குரலில், அவர் போனதற்குப் பின் அப் பெட்டியில் உள்ளவற்றைப் படிக்குமாறு என்னிடம் சொன்னார். அதாவது அவரது மரணத்துக்குப் பிறகு. "அவற்றில் பதிக்கும்படி ஏதாவது இருக்கிறதா என்று பார்" என்று சற்றுத் தயக்கத்துடன் கூறினார்.

புத்தகங்கள் சூழ்ந்த என் படிப்பறையில் நாங்கள் அப்போதிருந்தோம். தொலைத்துத் தலை முழுகி விட மாட்டோமா என்று தடுமாறும் மனிதனைப் போல என் தந்தை அந்தப் பெட்டியை வைக்க இடம் தேடியவராய் அறைக்குள் போய் வந்து கொண்டிருந்தார். ஒரு வழியாக அவ்வளவாக நடமாட்டம் இல்லாத ஒரு மூலையில் வைத்தார். நாங்கள் இருவரும்



மறக்க முடியாத ஒரு தருணமாக அது அமைந்த போதிலும், சற்றுக் கழித்து எங்களுடைய வழக்கமான அலுவல்களில் இறங்கிவிட்டோம். ஜோக் அடித்துச் சிரித்துக் கொண்டும் ஒருவரையொருவர் கேலி செய்து கொண்டும் வாழ்க்கையின் உற்சாகமான நாள்களில் இளைப்பாறியபடி சென்றோம்.

வழக்கம் போல் தின வாழ்வின் சின்னஞ் சிறு நடப்புகளைப் பற்றி, துருக்கியின் முடிவற்ற அரசியல் பிரச்சினைகள் பற்றி, என் தந்தையின் (பெரும்பாலும்) தோல்வியுற்ற தொழில் முயற்சிகள் பற்றி எல்லாம், எந்த விதக் கவலையும் வருத்தமும் படாமல் பேசிக் கழித்தோம்.

என் தந்தையின் மறைவிற்குப் பிறகு பல நாள்கள் நான் அந்தப் பெட்டியைக் கடந்து சென்றேன். ஆனால், ஒரு தடவை கூட அதைத் தொடவில்லை. அந்தச் சிறிய கறுப்புத் தோல் பெட்டியும் அதன் பூட்டும் வட்டவடிவமான அதன்

மூலைகளும் எனக்கு மிகவும் பரிச்சயமானவை. அவர் வெளியூருக்குச் செல்லும் சமயங்களிலும் சில சமயம் உள்ளூர் வேலைகளுக்கும் அந்தப் பெட்டியில் ஆவணங்களை எடுத்துக்கொண்டு தந்தை செல்வார். நான் குழந்தையாய் இருந்த போது அவர் தன் பிரயாணத்திலிருந்து திரும்பி வந்ததும் நான் அந்தப் பெட்டியைக் குடைந்து அதிலுள்ள பொருள்களையும் அதில் நிரம்பியிருக்கும் வெளிநாட்டு வாசனையையும் ஆர்வத்துடன் பார்த்தும் முகர்ந்தும் மகிழ்ந்தது இப்போதும் என் நினைவில் உள்ளது. இந்தக் கைப்பெட்டி எனக்கு நன்கு பரிச்சயமான நண்பன், என் இளம்பிராயத்தை நினைவூட்டும் சக்தி வாய்ந்த ஒன்று; ஆனால், நான் ஏன் தொட மாட்டேன் என்கிறேன்? ஏன்? அதனுள் இருக்கும் புதிர்களின் கனம்தான் காரணமா?

இந்தக் கனத்தின் அர்த்தம் பற்றி நான் பேசப் போவதில்லை. ஓர் தாழிடப்பட்ட அறைக்குள் இருக்கும் மேஜையின் முன்னால் தனியே உட்கார்ந்து தன் சிந்தனைகளை வெளிப்படுத்தும் காரியத்தை ஒருவன் புரிவதுதான் இலக்கியம்.

என் தந்தையின் கைப்பெட்டியைத் தொடும் போதெல்லாம் அதைத் திறக்க மனது வரவில்லை. அதனுள் இருக்கும் சில நோட்டுப் புத்தகங்களில் என்ன உள்ளன என்று எனக்குத் தெரிந்திருந்தது. சிலவற்றில் என் தந்தை எழுதுவதைப் பார்த்திருக்கிறேன். 1940களில் அவரது இளமைக் காலத்தில் என் தந்தை ஒரு பெரிய நூலகம் வைத்திருந்தார். அவர் இஸ்தான்புல்லைச் சார்ந்த ஒரு கவியாக அழைக்கப்பட விரும்பினார். வாலரியைத், துருக்கி மொழியில் மொழிபெயர்த்தார். ஆனால், சில வாசகர்களையே கொண்ட ஒரு வறுமை நிறைந்த நாட்டில், கவிஞர்கள் எதிர்கொண்டிருந்த மோசமான வாழ்க்கையை அவர் விரும்பவில்லை. என் பாட்டனார் செல்வாக்கு மிகுந்த வியாபாரியாக விளங்கினார். அதனால் குழந்தையாக, இளைஞனாக என் தந்தை சுகபோக வாழ்க்கையை அடைந்திருந்தார். எழுத்துக்காக, இலக்கியத்துக்காக அவர் கஷ்ட ஜீவனத்தை அணைத்துக்கொள்ள விரும்பவில்லை. வாழ்க்கையின் செழிப்பை அவர் மிகவும் விரும்பினார் என்றுதான் நான் நினைக்கிறன்.

என் தந்தையின் கைப்பெட்டியினுள் இருந்தவற்றைத் தொடாமல் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்ததற்குக் காரணம் படித்தபின் அவற்றை நான் விரும்பாமல் போய்விட்டால்... என்னும் பயம்தான். ஏனெனில் என் தந்தை அவரது படைப்புகளைத் தீவிரமாக எடுத்துக்கொள்ளவில்லை என்பது போலக் காட்சியளித்துக் கொண்டிருந்தார். ஆனால், நான் உள்ளூரப் பயப்பட்டுக் கொண்டிருந்ததன் உண்மைக் காரணம் என்னவென்றால், நான் எதிர்பார்க்காத வகையில் அவர் ஒரு சிறந்த எழுத்தாளராக இருப்பாரோ என்னும் அச்சம்தான். அதனால்தான் அவரது கைப்பெட்டியை நான் திறக்க முயலவில்லை. இதை வெளிப்படையாகச் சொல்லவும் என்னால் முடியவில்லை. அவ்வாறு ஒரு சிறந்த இலக்கியத்தை நான் அப்பெட்டியிலிருந்து கண்டெடுத்திருந்தால் அந்தத் தந்தையின் உள்ளே முற்றிலும் வேறுபட்ட இன்னொரு மனிதர் இருந்திருப்பதை நான் வெளியே கொண்டு வர வேண்டும். இது அச்சுறுத்தும் சாத்தியமாக இருந்தது. ஏனெனில் நான் என் தந்தையை என் தந்தையாகத்தான் பார்க்க விரும்பினேன் - எழுத்தாளராக அல்ல.

ஒரு படைப்பாளி என்பவன் அவனுக்குள் இருக்கும் இன்னொரு மனிதனைக் கண்டெடுப்பதில் பல வருடங்கள் உழைக்க வேண்டியிருக்கிறது; அவனைச் சுற்றியுள்ள உலகு அவனை உருவாக்குவது பற்றியும் கூட. நான் எழுதுவதைப் பற்றிப் பேசும் போது என் மனதில் முதலாவதாக எழும் சிந்தனை, நாவலை அல்லது கவிதையை அல்லது இலக்கிய மரபைப் பற்றி அல்ல; தன்னை ஓர் அறைக்குள் அடைத்துக்கொண்டு மேஜையின் முன்பாக அமர்ந்தபடி தனியாகத் தன்னை உள்நோக்கிப் பார்க்கும் மனிதனைப் பற்றியும் அவன் வார்த்தைகளை வைத்து உருவாக்கும் உலகைப் பற்றியும்தான். இந்த மனிதன் அல்லது பெண்மணி, ஒரு தட்டச்சுப் பொறியை, இல்லாவிட்டால் லகுவில் உதவி புரியும் கணினியை அல்லது பேனா, பென்சிலை (முப்பது வருடங்களாக நான் உபயோகித்தது இதைத்தான்.) பயன்படுத்தியிருக்கலாம். அவன் எழுதும் போது காப்பியோ தேனீரோ அருந்துவதும் புகைபிடிப்பதுமாக செயல் புரிவதுண்டு. அவ்வப்போது இருந்த இடத்திலிருந்து எழுந்து ஜன்னல் வழியாகத் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தைகளைப் பார்க்கலாம். கொஞ்சம் அதிர்ஷ்டம் இருந்தால் பச்சை மரங்களையும் சுவர்களையும் பார்க்கக் கூடும். என்னைப் போல அவன் நாவல்கள், கவிதைகள், நாடகங்களை எழுதலாம். ஆனால், இதெல்லாம் மேஜையின் முன்னே உட்கார்ந்து பொறுமையாகத் தன்னை உள்நோக்கிப் பார்க்கும் காரியம் கைகூடும் போதுதான் சாத்தியம். உள்நோக்கிப் பார்த்ததை வார்த்தைகளில் கொண்டு வருவதையும் சுற்றுப்புறம் பற்றிய சிந்தனைகளை அசை போடுவதையும் அவன் பொறுமையுடன், பிடிவாதத்துடன், மகிழ்ச்சியுடன் செய்யும் போது படைப்பு நிகழ்கிறது. நான் என் மேஜையின் முன் உட்கார்ந்து எழுதிய போது நாள் கணக்கில், மாதக்கணக்கில் வருடக் கணக்கில் மெதுவாகக் கண்டெடுத்த புதிய சொற்களைக் காலியாயிருந்த பக்கங்களில் நிரப்பினேன். ஏதோ நானொரு புதிய உலகைப் படைப்பவன் போல, என்னுள் இருக்கும் மனிதனை வெளிக்கொண்டு வருகின்றவனைப் போல உணர்ந்தேன். ஒரு பாலத்தையோ ஸ்தூபியையோ கட்டும் மேஸ்திரியைப் போல. படைப்பாளிகளாக நாங்கள் வார்த்தைகளைக் கற்களென உபயோகிக்கிறோம். ஒவ்வொரு வார்த்தையையும் பயன்படுத்தும்



போது, அவற்றை எங்கள் கைகளில் ஏந்தியிருப்பது போலவும், ஒவ்வொன்றும் மற்றதன் மேல் தொடர்ந்து அமைவது எப்படி என்று கவனித்தும் அவற்றைத் தடவிக் கொடுத்தும் சில சமயம் அருகிலிருந்தும் சிலசமயம் தொலைவிலிருந்தும் பார்க்க அவை காட்சியளிப்பது எப்படி என்று நோக்கியும் செயலாற்ற வேண்டியிருக்கிறது. எங்கள் பேனாக்கள் இவ் வார்த்தைகளை எடை போட்டும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்கு மாற்றியமைத்தும் பொறுமையாக வருஷக் கணக்கில் இருக்க, ஓர் புதிய உலகை நாங்கள் படைக்கிறோம்.

ஒரு எழுத்தாளனின் ரகசியம் உத்வேகத்திலிருந்து அல்ல - ஏனெனில் அது எங்கிருந்து வருகிறது என்று கண்டுபிடிக்க முடிவதில்லை - மாறாக அவனது பிடிவாதத்திலிருந்தும் பொறுமையிலிருந்தும்தான். அந்த அந்த அழகான துருக்கியப் பழமொழி - ஓர் ஊசியின் உதவியுடன் கிணறு தோண்டுவது - எழுத்தாளர்களை மனதில் வைத்து சொல்லப்பட்டதுதான் என்று எனக்குத் தோன்றுகிறது. தனது காதலியின் விருப்பத்தை நிறைவேற்ற மலையைத் தோண்டும் ஃபெர்ஹாத்தின் பொறுமையை நான் நேசிக்கிறேன். அதனை என்னால் புரிந்து கொள்ளவும் முடிகிறது. 'என் பெயர் சிவப்பு' என்னும் என் நாவலில் பல வருஷங்களாக ஒரே குதிரையை முழு உத்வேகத்துடன் பாரசீக ஓவியர்கள் வரைவதையும் அவர்கள் தாம் இழுக்கும் கோடுகளை மனனம் செய்தவர்களாகக் கண்களை மூடிக்கொண்டு அழகிய அந்தக் குதிரையை வரையும் வித்தையைக் கற்றவர்களாக இருந்ததையும் நினைத்துப் பார்த்துச் சித்தரித்திருக்கிறேன். அப்போது நான் என் எழுத்தையும் அதனுடன் இணைந்த என் வாழ்க்கையையும் பேசியதாகத் தோன்றுகிறது. ஓர் எழுத்தாளன் தன் கதையைச் சொல்ல வேண்டுமானால் - அது ஏதோ மற்றவர்களுடைய கதை என்பது போல நிதானமாக இயங்க வேண்டும். அந்தக் கதையின் வீர்யம் அவனுள் இருந்து எழ வேண்டும். ஒரு மேஜையின் முன்பாக அமர்ந்து கொண்டு அவன் தன்னையே பொறுமையுடன் தனது கலைக்கு அர்ப்பணிக்க வேண்டும். (சிலருக்குத் தொடர்ந்தும் மற்றவர்களுக்கு கண்ணைக் காண்பிக்காமலும் வலம் வரும்) அதிர்ஷ்ட தேவதை, நம்பிக்கையும் உறுதியும் கொண்டவருக்கு, தனிமையில் உழலும் படைப்பாளிக்கு, அவனுக்குத் தனது ஆக்கத்தின், கனவுகளின் மீது நம்பிக்கை லேசாகப் பிறழும் போதும், தனது படைப்பு தனது கதை தவிர வேறு ஒன்றுமில்லை என்று அவன் உறுதியாக நினைக்கும் போதும்; அவனைத் தேர்ந்தெடுத்து கதைகள், கனவுகள், படிமங்கள் ஆகியவற்றைத் தந்து அவன் படைக்க விரும்பும் உலக்கைச் செதுக்க உதவுகிறது. இன்று நான் என் முழு வாழ்க்கையையும் அர்ப்பணித்து எழுதிய படைப்புகளில் நான் கண்டடைந்த வாக்கியங்கள் தந்த புளகாங்கிதம் என் கற்பனைகளிலிருந்து எழுந்தன அல்ல, மாறாக வேறொரு சக்தி அவற்றைக் கண்டு பிடித்து எனக்குப் பெருந்தன்மையுடன் அளித்தது என்று நினைக்கிறேன்.

என் தந்தையின் கைப்பெட்டியைத் திறந்து அவரது நோட்டுப் புத்தகங்களை படிக்க அஞ் சியதற்குக் காரணம் என் கஷ்டங்களை நான் சகித்துக் கொண்டதை அவரால் பொறுக்க முடிந்திருக்காது என்பதாலும் கூட. அவர் தனிமையை அல்ல , மாறாக நண்பர்கள், கூட்டங்கள் பொருட் காட்சியரங்கங்கள் என்று அனைத்துடனும் கலந்துலாவி சிரித்து மகிழ்ந்தவராய் இருந்திருந்தார். ஆனால், பின்னாளில் என் எண்ணங்கள் மாறிவிட்டன. உரிமையைத் துறப்பது, பொறுமையுடனிருப்பது போன்ற கனவுகள் என் சொந்த வாழக்கையில் ஓர் எழுத்தாளனாக நானே ஏற்படுத்திக்கொண்ட பிரமைகள் என்று எண்ணினேன். கூட்டத்துடன் கலந்து உறவாடி நண்பர்களுடன் இழைந்து குடும்பத்துடன் பிணைந்து பேசிச் சிரித்த சிலர் மிகச் சிறந்த எழுத்தாளர்களாகவும் விளங்கியி

ருக்கிறார்கள். எங்கள் இளமையில் என் தந்தை ஒரே விதமான குடும்ப வாழ்க்கையில் சலிப்புற்றவராக எங்களை விட்டுவிட்டுப் பாரிசுக்குச் சென்றார். அங்கு மற்ற எழுத்தாளர்களைப் போல ஓர் ஹோட்டல் அறையில் உட்கார்ந்து நோட்டுப் புத்தகங்களை நிரப்பினார். அந்த நோட்டுப் புத்தகங்களில் பல இந்தக் கைப்பெட்டியில் உள்ளன என்று நான் அறிவேன். ஏனெனில் என் தந்தை இந்தக் கைப்பெட்டியைக் கொடுப்பதற்குச் சில வருஷங்கள் முன்பாகவே அவர் என்னிடம் அவருடைய எழுத்துக்களைப் பற்றிக் கூறத் தொடங்கியிருந்தார். ஆனால், அப்போதும் அவர் தன்னுடைய எழுத்தாளனாக வேண்டும் என்னும் கனவுகளைப் பற்றியோ மற்ற பாதிப்புகளைப் பற்றியோ தன்னுடைய அடையாளம் பற்றிய சந்தேகங்கள் எழுந்த ஹோட்டல் அறைச் சிந்தனைகளைப் பற்றியோ கூறியதில்லை. அதற்குப் பதிலாக நடைபாதைகளில் சார்த்தரைப் பார்த்தது பற்றியும் அவர் படித்த புத்தகங்களை பற்றியும் பார்த்த சினிமாக்களைப் பற்றியும் ஏதோ முக்கியமான விஷயங்களைப் பகிர்ந்துகொள்ளும் சிரத்தையுடன் கூறுவார். நான் படைப்பாளியாக ஆனதற்கு மதத் தலைவர்கள், பாஷாக்கள் ஆகியோரை விட உலக எழுத்தாளர்களைப் பற்றி அதிகமாக என்னிடம் பேசிய என் தந்தைதான் காரணமென்பதை நான் மறக்கவில்லை. அவரது நூலகத்தில் எனக்கு கிடைத்த மகிழ்ச்சி, அவரது எண்ணங்கள் எனக்கு ஊட்டிய இலக்கிய ஆர்வம் ஆகியவற்றை நினைவில் இருத்தி, அவரது பெட்டியைத் திறந்து பார்க்க வேண்டும் என்று முடிவு செய்தேன். ஆனால், முடியவில்லை!

என் தந்தை எனக்களித்த அப்பெட்டியைத் திறந்து பார்க்க மனம் வரவில்லை. சில நேரங்களில் அவர் திண்டு இருக்கையில் அவரது புத்தகங்களுக்கு முன்னால் காலை நீட்டிக்கொண்டு படுத்திருப்பார். சில சமயங்களில் கையிலிருக்கும் புத்தகத்தில் அல்லது பத்திரிகையில் அவர் பார்வை இருக்காது. ஏதோ கனவில் மிதந்து கொண்டு தன்னையே இழந்துவிட்டவர் போல இருப்பார். வழக்கமாக ஜோக் அடித்துக்கொண்டும் கேலி செய்து கொண்டும் குடும்பச் சண்டையில் ஈடுபட்டுக்கொண்டும் இருப்பவர் போல அந்தச் சமயங்களில் அவர் காணப்பட மாட்டார். திருப்தியற்றவர் போல அவர் காணப்படுவதை என் குழந்தைப் பருவத்தில் நான் கவனித்திருக்கிறேன்.

இப்போது பல வருஷங்கள் கழித்து இத்தகைய திருப்தியுறாத மனப்பான்மை ஒருவரை எழுத்தாளராக ஆக்குகிறது என்று நான் நினைக்கிறேன். எழுத்தாளராக ஒருவருக்குப் பொறுமையும் பிரயாசையும் இருந்தால் மட்டும் போதாது, கூட்டங்களைத் தவிர்த்து, சாதாரண விஷயங்களைப் பொருட்படுத்தாது தன்னை ஓர் அறையில் அடைத்துக்கொள்ளும் மனப்பான்மையைப் பெற்றிருக்க வேண்டும். பொறுமையும் நம்பிக்கையும் நம் எழுத்தில் ஆழ்ந்த பரிமாணங்களைக் கொண்டு வந்து விடும் என்று நம்புகிறோம். ஆனால், தன்னை அறைக்குள்ளிருப்பவனாக மாற்றிக்கொள்ளும் போதுதான், செயல் புரியும் ஊக்கம் முன்னே வருகிறது. தனது புத்தகத்தைப் படிக்கும்போது கிடைக்கும் மனவெழுச்சி, தன் மனக்குரலுக்கு மட்டுமே செவி சாய்க்கும் உறுதி, தனக்கான தனித்த உலகம் ஆகியவை ஓர் சுதந்தரமான எழுத்தாளனை உருவாக்குகின்றன. நவீன இலக்கியத்தின் ஆரம்ப காலத் தத்துவ ஞானியும் படைப்பாளியுமான மாந்தேன் எழுத்துக்களை என் தந்தை பல முறை உய்த்துணர்ந்திருக்கிறர். உலகின் எந்த மூலையிலிருந்தாலும் - கிழக்கோ மேற்கோ- சமூகத்திலிருந்து விலகித் தனது அறிவாற்றலுடன் உள்ளொளியுடன் இயங்கும் எழுத்தாளர்களின் மரபில் நான் இருக்க விரும்புகிறேன். ஒரு எழுத்தாளனின் உண்மையான புறப்பாடு என்பது அவன் தனது ஞானத்துடன் உள்ளுறைவதில்தான் இருக்கிறது.

நாம் இரைச்சல்களிலிருந்து விலகி நிற்கும் போது, நாம் நினைத்தபடி நாம் ஒதுக்கப்பட்டு விடவில்லை என்பது தெரிய வருகிறது. நமது முன்னோடிகளின் வார்த்தைகள் நம்முடன் உறவாடுகின்றன. அவர்களின் படைப்புகளும் தரிசனங்களும் நம்மை வந்தடைகின்றன. இதைத்தான் நாம் மரபு என்கிறோம். இலக்கியம் மனித குலத்தின் மதிப்பு மிக்க சேமநிதி என்பதை, அதைத் தேடிக் கண்டுபிடிக்கையில் உணருகிறோம். மனித குலமும் சமூகங்களும் எழுத்தாளர்களின் சீரிய வார்த்தைகளில் கண்டறியும் உண்மை மூலம் அவர்களை அறிவுத் திறன் மிக்கவர்களாகவும் முன்னேற்றம் அடைந்தவர்களாகவும் வெளியுலகின் முன் வைக்கின்றன. மாறாகப் புத்தகங்களைக் கொளுத்துவதிலும் எழுத்தாளர்களைச் சிறுமைப்படுத்துவதிலும் நாம் காண்பது ஓர் இருண்ட மற்றும் எதிர்காலத்தைப் பற்றி அக்கறையில்லாத சூழல் நம் மீது திணிக்கப்படுவதைத்தான் என்பது என் கருத்து. இலக்கியத்தின் அக்கறை ஒரு நாட்டைப் பற்றியது மட்டுமில்லை. தனது ஞானத்துடன் உள்ளுறைவதில்தான் தன் இயக்கம் ஸ்தாபிக்கப்படுகிறது என்று உணரும் எழுத்தாளன் இலக்கியம் என்பது பரந்த இவ்வுலகின் வீச்சைக் கைக்கொள்ள உதவும் சாதனம் என்று அறிகிறான். அவனது கலைத்திறன் அவனது கதைகளை மற்றவர்களின் கதைகள் போல எடுத்துக் காண்பிப்பதிலும் மற்றவர்களின் அனுபவங்கள் தனது கதைகளே என்று சொல்லிக்கொள்வதிலும் இருக்கிறது. இலக்கியம் என்பது இதுதான். ஆனால், இதற்காக நாம் செய்ய வேண்டிய அடிப்படைக் காரியம் மற்றவர்களின் படைப்புகளில் நாம் உலவ வேண்டும்.;

என் தந்தையிடம் 1500 புத்தகங்கள் அடங்கிய ஒரு நூலகம் இருந்தது. ஒரு எழுத்தாளனுக்கு இது தேவைக்கு மீறிய அளவு. எனக்கு இருபத்திரண்டு வயதாகும் போது அவ்வளவையும் நான் படித்திராவிட்டாலும் எனக்கு அவற்றில் எவை முக்கியமானவை, எவை படிப்பதற்கு எளிதானவை, எவை கிளாசிக், கல்விக்கு



வேண்டிய புத்தகங்கள் யாவை, உள்நாட்டுச் சரித்திரத்தில் அவ்வளவு முக்கியமாக இல்லாத விஷயங்கள் அடங்கிய புத்தகங்கள் எவை, என் தந்தை மிகவும் உயர்வாகக் கருதிய பிரஞ்சு எழுத்தாளர்கள் யார் யார் என்ற விஷயங்களையெல்லாம் அறிந்திருந்தேன். சில சமயங்களில் இந்த நூலகத்துக்குச் சற்றுத் தொலைவில் நின்றுகொண்டு என்றாவது ஒரு நாள் நான் இன்னொரு வீட்டில் எனக்கான உலகமாக ஓர் நூலகத்தைக் கட்டுவேன் என்று கற்பனை செய்வேன். தூரத்திலிருந்து பார்க்கும் என் தந்தையின் நூலகம் ஏதோ உலகின் மிகச் சிறிய படம் போலக் காணப்பட்டது. நாங்களிருந்தது இஸ்தான்புல்லின் ஓரத்திலிருந்த ஒரு மூலையில். அவருடைய மேல்நாட்டுப் பயணங்களின் போது, குறிப்பாக அமெரிக்கா, பாரிஸ் ஆகிய இடங்களில் வாங்கிய புத்தகங்களும் இஸ்தான்புல்லில் இருந்த பழைய புதிய புத்தகக் கடைகளிலிருந்து நாற்பதுகளில், ஐம்பதுகளில் வாங்கிய அயல் மொழிப் புத்தகங்களும் அடங்கிய நூலகத்தை அவர் கட்டியிருந்தார். என் உலகம் உள்ளூர், தேசிய, மேற்கத்திய கதம்ப உலகமாக இருந்தது.

எழுபதுகளில் ஓர் உத்வேகத்துடன் எனது நூலகத்தைக் கட்ட ஆரம்பித்தேன். ஒரு எழுத்தாளனாக ஆக வேண்டும் என்று இஸ்தான்புல்லில் இருக்கும் போது நான் முடிவெடுக்கவில்லை. ஓர் ஓவியனாகவும் இருக்க எனக்குப் பிடிக்கவில்லை. என் வாழ்க்கையை எப்படி எடுத்துச் செல்லுவது என்றும் என்னால் தீர்மானிக்க முடியவில்லை. அடிமனதில் படிக்க வேண்டும், கற்க வேண்டும் என்ற ஆசை எழுந்தாலும் மற்றவர்களைப் போல வாழ்வது என்னால் முடியாது என்னும் ஐயம் எனக்குள் இருந்தது. இதற்கு என் தந்தையின் நூலகம் ஓரளவுக்குக் காரணமாக இருந்தது. மற்றொரு கவலைக்கிடமான விஷயம் இஸ்தான்புல்லில் ஓவியர்களோ எழுத்தாளர்களோ- அவ்வளவாக மதிக்கப்படாதவர்களாக இருந்தார்கள். அவர்களின் எதிர்காலம் பற்றிய நம்பிக்கையை ஊட்டும் விதமாய்ச் சூழல் இல்லாதிருந்தது. எழுபதுகளில் என் தந்தை தந்த பணத்தை வைத்து மங்கிய, கசங்கிய, கந்தலான புத்தகங்களை பிளாட்பாரத்தில் வறுமையும் நோயும் பீடித்திருந்த பழைய புத்தக வியாபாரிகளிடமிருந்து வாங்குவேன்.

உலகில் என் இடம் - என் வாழ்வைப் போல் இலக்கியத்திலும் ரு 'நடுநாயகமாக' விளங்கவில்லை என்று நினைத்தேன். அத்தகைய 'நடுநாயக' நிலைமையில் வாழ்க்கை என்பது செல்வாக்குடனும் செல்வத்துடனும் விளங்கியது. இது என் வரையில் மட்டுமல்ல, முழு இஸ்தான்புல்லுக்கும் ஏன் துருக்கிக்கும் பொருந்தும் ஒரு நிலைமை. நான் அதற்கு வெளியே இருந்தேன். இன்று இந்த எண்ணத்தை நான் உலகில் உள்ள பலரிடமும் காண்கிறேன். அதே மாதிரி இலக்கிய உலகிலும் நான் ஒரு மூலையில்தான் இருந்தேன்... நான் உலகம் என்று சொன்னது மேற்கத்திய உலகம். அதில் துருக்கியர்களான நாங்கள் வெளியே. என் தந்தையின் நூலகம் ஓர் எடுத்துக்காட்டு. அங்கு ஒரு பக்கம் எங்கள் இஸ்தான்புல்லின் இலக்கியங்கள் - எங்களின் பழக்க வழக்கங்கள், உள்ளூர் உலகம் ஆகியவற்றைப் பற்றி எல்லாவிதமான விவரணைகளுடன். மற்றொரு பக்கம் எங்களுக்குப் பரிச்சயமேயில்லாத மேற்கத்திய இலக்கியம். அத்தகைய பரிச்சயமின்மை எங்களுக்கு வேதனையையும் நம்பிக்கையையும் தந்தது! படிப்பதும்

எழுதுவதும் மற்றொரு உலகின் விசித்திரமான விந்தையான அனுபவத்தைத் தந்தது. என் தந்தை அந்த நாவல்களை படித்துத் தனது வாழ்க்கையிலிருந்து தப்பித்து மேற்கே செல்ல விரும்பினார் என்று எனக்குத் தோன்றியது. அதைத்தான் நான் பின்னாளில் செய்தேன். அல்லது நாங்கள் தெரிவு செய்த புத்தகங்கள் எங்களை எங்கள் கலாச்சாரத்திலிருந்து விடுவிக்கும் என்னும் நம்பிக்கையில் செய்தோம் என்று தோன்றுகிறது. படித்து மட்டுமல்ல, எழுதியும் நாங்கள் எங்கள் இஸ்தான்புல் வாழ்க்கையை விட்டுவிட்டு மேற்கே செல்ல விழைந்தோம். அவருடைய நோட்டுப் புத்தகங்களை எழுதி முடிக்க என் தந்தை பாரிசுக்குச் சென்று தனிமையில் இருந்து முடித்த பின் துருக்கிக்குத் திரும்பினார். இதுதான் என் தந்தையின் கைப்பெட்டியைப் பார்க்கும் போதெல்லாம் என்னை நிலைகுலையச் செய்தது. 25 ஆண்டுகள் ஓர் அறையில் தனியாக அமர்ந்துகொண்டு ஏதோ அவர் எழுதுவது ரகசியமாக சமூகத்தின், அரசின், மக்களின் கண்களுக்குப் படாமல் இருக்க வேண்டும் என்று நினைத்து என் தந்தை செயலாற்றி அவரின் ஆழ்ந்த சிந்தனைகளை இந்தக் கைப்பெட்டியில் மறைத்து வைப்பது போல் நடந்து கொண்டதுதான் எனக்கு அவர் மீது கோபத்தை உண்டாக்கிற்று. அவர் இலக்கியம் படைப்பதைத் தீவிரமாக எடுத்துக்கொள்ளவில்லை என்று எனக்குத் தோன்றியது.

என் வாழ்க்கையைப்போல என் தந்தை அவருடைய வாழ்க்கையை அமைத்துக்கொள்ளவில்லை என்பதுதான் எனக்கு அவர் மேலிருந்த கோபத்துக்கு காரணம். அவர் தன் வாழ்க்கையில் எப்போதும் சச்சரவில் ஈடுபட்டதில்லை. நண்பர்களுடனும் அவரது பிரியத்துக்கு உகந்தவர்களுடனும் அவர் சிரித்து மகிழ்ந்து வாழ்ந்தார். ஆனால், என்னுடைய இந்தக் கோபம் உண்மையில் பொறாமைதான் என்று எனக்குத் தோன்றியது. ஆம், அதுதான் சரியான வார்த்தை. இது என்னைத் தடுமாற வைத்தது. இதுவே என் உள்மனதில் ஓர் ஏளனமான குரல் என்னைப் பார்த்து, 'சந்தோஷம் என்றால் என்ன?' என்று கேட்கும். தனிமையில் சிந்தனையில் வாழ்வது என்பதா? ஆழ்ந்து சமூகத்தில் சௌகரியமாக வாழ்வதா? அல்லது மற்றவர்களின் அடியொற்றி வாழ்வதா? மற்றவர்களுடன் இயைந்தொழுகுவதாகக் காண்பித்துக்கொண்டு தனிமையில் ரகசியமாக எழுதுவது சந்தோஷமா அல்லது துக்கமா? ஆனால், இதெல்லாம் என் கோபத்தில் எழுந்தவை. எங்கிருந்து நான் மகிழ்ச்சிதான் சிறந்த வாழ்க்கை என்ற கருத்தைப் பெற்றேன்? மனிதர்கள், பத்திரிகைகள் என்று ஒவ்வொருவரும் மகிழ்ச்சிதான் வாழ்க்கை என்று நடமாடிக் கொண்டிருந்தார்கள். இதற்கு மாற்றான ஒரு கருத்து உண்மையாக இருக்கக் கூடும் என்பதை ஏன் பரிசீலிக்கக் கூடாது? என் தந்தை என்னவோ பலமுறை குடும்பத்தை விட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய கலக்கத்தை, சஞ்சலத்தை நான் முழுமையாக அறிந்துகொண்டேன் என்று எவ்வாறு கூற முடியும்?

என் தந்தையின் கைப்பெட்டியை நான் திறந்த போது என்னை ஆக்கிரமித்துக்கொண்டது இதுதான். என் தந்தையின் ரகசியமான, சந்தோஷமில்லாத, நான் அறிந்திராத வாழ்க்கையை அவர் தன் எழுத்துக்களில் வடித்து வைத்தாரா? அப்பெட்டியைத் திறந்ததும் பயண வாசனை பரவ, கண்ணில் பட்ட நோட்டுப் புத்தகங்களை எனக்கு அவர் என் இளமைக்கு காலத்தில் காண்பித்தது நினைவுக்கு வந்தது. அவற்றை நான் முழுமையாக படித்ததில்லை. இளைஞனாக அவர் எங்களை விட்டுவிட்டுப் பாரிசுக்குச் சென்று எழுதியவை என் கண்ணில் பட்டன. என் வயதில் என் தந்தை என்ன எழுதினார், என்ன சிந்தித்தார் என்ற சுயசரிதத்தை நான் அந்த நோட்டுப் புத்தகங்களில் தேடினேன். ஆனால், நான் எதிர்பார்த்தபடி இல்லாது அங்குமிங்குமாக ஓர் எழுத்தாளனின் குரலைக் கேட்டேன். இது என் தந்தையின் குரல் அல்ல என்று நான் எனக்குள் சொல்லிக்கொண்டேன். நானறிந்த என் தந்தையின் குரல் என்று நம்பும்படி அது அமைந்திருக்கவில்லை. என் மனதின் ஆழத்தில் அதை எழுதியது என் தந்தை அல்ல என்ற அச்சம் எனக்கு ஏற்பட்டது. என் தந்தையின் எழுத்தில் நான் சிறப்பு என்று எதையும் காண முடியாது என்றும் மற்றவர்களின் தாக்கம் அவரது எழுத்தில் இருந்தது என்றும் எனக்குத் தோன்றியதில் நான் குமைந்து விட்டேன். என் வாழ்க்கை, எழுத வேண்டும் என்னும் ஆர்வம், என் படைப்பு ஆக்கம் எல்லாவற்றையும் சிதைத்து விடும் மன நிலைமைக்கு நான் தள்ளப்பட்டேன். எழுத்தாளனாகத் தொடங்கிய என் வாழ்க்கையின் முதல் பத்து வருடங்களில் இந்தப் பதற்ற மன நிலை என்னை ஆழமாக ஊடுருவியிருந்தது. இதை எதிர்த்துப் போராட முயற்சித்த போது ஓவியத்தைப் போல் எழுத்திலும் நான் நிராகரிக்கப்படும் நிலமைக்குத் தள்ளப்படுவேன் என்ற பயம் ஏற்பட்டது. அத்தகைய தோல்வி நாவல் எழுதும் என் முயற்சியைக் கை விட்டு விட நிர்ப்பந்திக்கும் என்று நினைத்தேன்.

என் தந்தையின் கைப்பெட்டியை மூடி வைத்த பின்பு முன்பே கூறியபடி சொந்த ஊரில் கைவிடப்பட்டவன் என்றும் எனக்கென்று பிரத்தியேகமான அடையாளம் எதுவும் இல்லை என்றும் எனக்குள் இரண்டு எண்ணங்கள் ஏற்பட்டன. இம்மாதிரி உணர்வுகள் ஏற்பட்டது இப்போதுதான் முதல் தடவையல்ல. பல வருஷங்களாக எழுதும் போதும் படிக்கும் போதும் இந்த எண்ணங்கள் மனதில் எழுந்து என்னை அலைக்கழித்த வண்ணம் இருந்தன. என் ஊக்கத்தை நிலைகுலைய வைக்கும் வண்ணம் இத்தகைய வலி மிகுந்த குழப்பம் நிறைந்த எண்ணங்கள் என்னைப் பீடித்திருந்தன. ஆனால், தொடர்ந்து முயற்சித்து எழுத்தாளனாக நிலைநிறுத்திக் கொண்ட பின்தான் இத்தகைய குழப்பங்களும் அவை ஏற்படுத்திய வலிகளும் என்னை விட்டு அகன்றன (என் பெயர்



சிவப்பு, கறுப்புப் புத்தகம் ஆகியவற்றில் விரித்தபடி). விளிம்பு நிலை வாழ்க்கையின் பிரச்சினைகளை பற்றியும் (பனி, இஸ்தான்புல் - ஒரு நகரைப் பற்றிய நினைவுகள்) எழுதினேன். ஒரு எழுத்தாளன் தன்னில் உறைந்திருக்கும் ஆழமான காயங்களை வெளிப்படுத்த வேண்டும். ரகசியமான காயங்களை அவனே உணர்ந்திருக்க வாய்ப்பில்லாமல் இருக்க, அவற்றைத் தேடிக் கண்டெடுத்து வெளியுலகின் முன் வைக்க வேண்டும். அக்காயங்கள் தரும் வலிகளை அவன் தன் படைப்பில் தயங்காது ஊக்கத்துடன் ஒரு பகுதியாக வெளிக்கொணர வேண்டும்.

அனைவரும் அறிந்திருக்கும் விஷயங்களை, ஆனால், அவர்கள் தங்களுக்குத் தெரியும் என்று அறியாத நிலையில், ஒரு எழுத்தாளன் அவர்களுடன் அவற்றைப் பற்றி உரையாடுகிறான். அவனது அறிவுறுத்தலுக்குப் பிறகு அது நீட்சி பெறுவதைக் காண்பதும் மகிழ்ச்சியான தருணங்களை உருவாக்குகின்றன. வாசகர் தனக்குப் பரிச்சயமான அதே சமயம் மாயம் நிரம்பிய உலகில் பிரவேசிக்கிறார். தனது எழுத்தைப் பல வருடங்களுக்குக் கூர் தீட்டிப் புதியதோர் உலகைக் கொண்டு வரும் சமயம் படைப்பாளி தெரிந்தோ தெரியாமலோ தனது ரகசியக் காயங்களிலிருந்து ஆரம்பிக்கிறான். எல்லா மனித உயிர்களும் ஒருவர் மீது ஒருவர் நம்பிக்கை வைத்து - என்னைப் போலவே அவர்களுக்கும் காயங்கள் உண்டு - இயங்குகையில் மனித சமூகத்தின் மீது பெரும் நம்பிக்கை பிறக்கிறது. உண்மையான எல்லா இலக்கியங்களும் இத்தகைய குழந்தைத்தனமான நம்பிக்கையிலிருந்துதான் - ஒவ்வொருவரும் மற்றவரின் சாயல் கொண்டவர் - எழுகின்றன. ஓர் எழுத்தாளன் பல வருடங்களுக்குத் தன்னை அறைக்குள் அடைத்துக்கொண்டு தன்னை வெளிப்படுத்துகையில் நடுநாயகமற்ற உலகை, சார்பற்ற ஒற்றை மனித குலத்தை நினைப்பூட்டுகிறான்.

ஆனால்,என் தந்தையின் கைப்பெட்டியிலிருந்தும் எங்களின் சாராம்சமற்ற இஸ்தான்புல் வாழ்க்கை மூலமும் உலகம் 'நடுநாயகத்தைத்' தன்னுள் தக்க வைத்துக் கொண்டிருக்கிறது என்பதையும் அது எங்களிடமிருந்து வெகு தூரத்தில் இருக்கிறது என்பதையும் உணர முடியும். என் படைப்புகளில் நான் சற்று விரிவாகவே செக்காவின் பாணியில் இந்தக் கொடுமையை விவரித்திருக்கிறேன். இன்னொரு வழியில் அது எவ்வாறு என் நம்பகத்தன்மையை அசைக்க முயலுகிறது

என்பதையும். உலகின் பெரும்பான்மையான மக்கள் இதே உணர்ச்சிகளைக் கொண்டு வாழ்கிறார்கள் என்பதையும் என் அனுபவத்தில் உணருகிறேன். அவர்களில் பலர் பற்றாக்குறை, பாதுகாப்பின்மை, அவமரியாதை ஆகியவற்றை என்னை விட அதிகமாக உணருபவர்களாக இருக்கிறார்கள். மனித குலத்தைப் பீடித்திருக்கும் பெரிய க்ஷீணமாக நாடற்றும் வீடற்றும் பசிப்பிணியும் கொண்ட மனிதர்கள் வாழ்கிறார்கள். இன்று இலக்கியத்தை விடத் தொலைக்காட்சிப் பெட்டிகளும் செய்திப் பத்திரிகைகளும் இந்தப் பிரச்சனைகளை விரைவாகவும் எளிதாகவும் நமக்குச் சொல்லி விடுகிறார்கள். இலக்கியம் மனித குலத்தின் அடிப்படைப் பயங்கள், மனிதர்கள் ஒதுக்கப்படுவது, உபயோகமற்றவரென லாயக்கற்றவரெனக் கருதப்படுவது போன்றவற்றைச் சார்ந்து இருக்கின்றது. ஒரு சேர அவர்கள் எதிர்கொள்ளும் அவமானங்கள், இகழ்ச்சிகள், உளக்குறைகள், கற்பிதம் செய்துகொண்ட அவமதிப்புகள், தற்பெருமைகள் ஆகியவை அடுத்த வகைமுறையில் வருபவை... இத்தகைய உணர்ச்சிகளுடன் நான் முரண்படும்போது, அதுவும் அவை பகுத்தறிவுக்குப் பொருந்தாத, மிகைப்படுத்தப்பட்ட, வார்த்தைகளில் கூறப்படும் போது அவை என் உள் மனதில் இருந்த பகுதியைத் தொடுகின்றன. நான் மேற்கத்திய உலகுக்கு வெளியே உள்ள சமூகங்களை, மனிதர்களைப் பார்த்திருக்கிறோம். அவர்களை நான் எளிதாக அடையாளம் கண்டுகொள்ள முடியும். அவர்கள் அச்சத்தின் காரணமாக முட்டாள்தனமான வாதங்களை முன் வைக்கிறார்கள். அதற்கு முதன்மையான காரணம் தாங்கள் அவமானப்படுத்தப்படுவோமோ என்னும் பய உணர்வுதான். நான் அறிந்திருக்கும் மேற்குலகில் நாடுகளும் மனிதர்களும் வீண் பெருமையில் தங்களின் செல்வம் காரணமாக அல்லது மறுமலர்ச்சிக் காலம், அறிவெழுச்சிக் காலம், நவீனத்துவம் ஆகியவற்றைக் உலகிற்குக் கொண்டு வந்தது தாங்கள்தான் என்ற எண்ணம் காரணமாக காலங்காலமாய் சுய திருப்தியில் மூழ்கி விழுவதும் முட்டாள்தனத்தின் ஓர் அங்கம்தான்.

அப்படியென்றால் என் தந்தை மாத்திரமில்லாமல், நாம் எல்லோருமே மேற்குலகின் நடுநாயகத்தன்மைக்கு அதிக முக்கியத்துவம் தருபவர்கள்தான். அறைக்குள் தவம் செய்து எழுத முயலும் பயிற்சிக்கு எதிரான ஒன்று இது. உலகில் அனைவரும் ஒருவரையொருவர் பிரதிபலிப்பவரே என்னும் எண்ணம் ஒரு நாள் நம் படைப்புகள் படித்துப் புரிந்து கொள்ளப்படும் என்ற நம்பிக்கையை எழுப்புகிறது. ஆனால், இது என் அனுபவத்திலிருந்தும் என் தந்தையின் அனுபவத்திலிருந்தும் ஓரளவு தொல்லை தரும் இனிய நம்பிக்கையாக இருந்து விடுமோ என்று அஞ்சுகிறேன். ஏனெனில் நாம் கண்டு வருவது நமக்குக் கோபத்தைத் தூண்டும் அளவு புறக்கணிக்கப்பட்டு மூலையில் தள்ளப்படுவதை நாம் சந்திக்கிறோம். அன்பையும் வெறுப்பையும் ஒரு சேரத் தன் வாழ்நாள் முழுவதும் மேற்குலகின் மீது கொண்ட தஸ்தயேவ்ஸ்கி மாதிரி நானும் பல சந்தர்ப்பங்களில் உணர்ந்திருக்கிறேன். இன்றியமையாத ஓர் உண்மையை நான் புரிந்து கொண்டிருக்கிறேன் என்றால், அது அவர் மேற்குலகுக்கு மாறாக சிருஷ்டித்துக் கொண்ட மற்றொரு உலகம்தான்.

தங்கள் வாழ்வை இந்தப் பொறுப்புக்காக அர்ப்பணித்த எழுத்தாளர்கள் அறிந்த ஒரு பேருண்மை இதுதான்: நமது மூல நோக்கம் எதுவாக இருந்தாலும் மிகுந்த நம்பிக்கையுடன் பல வருடங்களைச் செலவழித்து உருவாக்கும் படைப்புகள் இறுதியில் நிச்சயமாகப் பல்வேறு இடங்களைச் சென்று அடையும். நாம் கோபத்துடனோ வருத்தத்துடனோ உருவாக்கியவை, வேறொரு உலகின் வருத்தத்துக்கும் கோபத்துக்கும் எடுத்துச் செல்லும் வல்லமை வாய்ந்தவை. என் தந்தை இத்தகைய உலகைக் கண்டடைந்தாரா? புதிய நிலம் ஒன்று தன்னை உருவாக்கிக் கொள்வது போல, பனிப்படலத்திலிருந்து எழுந்து நீண்ட கடல் பயணத்துக்குப் பின் ஓர் தீவாக மாறுவது போல இந்த மற்றொரு உலகம் நம்மைச் சிலிர்ப்படையச் செய்கிறது. மேற்கத்திய பயணிகள் இஸ்தான்புல்லை பனி பொழியும் தீவாக நினைத்துப் பார்க்க வந்து ஏமாந்தவர்கள் போலத்தான் நாமும் இருக்கிறோம். அவர்களின் பயணத்தின் முடிவில் அவர்கள் கண்டது, மசூதிகளும் பள்ளி வாசல் ஸ்தூபிகளும் நிரம்பிய ஒரு நகரை. கலவையான வீடுகள், வீதிகள், குன்றுகள், பாலங்கள், சரிவுகள், எல்லாம் கொண்ட ஓர் உலகை. இதைக் கண்டதும் நாமும் ஓர் உலகில் புகுந்து, புத்தகத்தில் அடைவது போல, நம்மை இழக்க விரும்புகிறோம். இளைப்பாறுகையில் நாம் அனுபவித்தது ஒதுக்கப்பட்ட, கோபம் நிறைந்த, ஆழமான துக்கம் நிரம்பிய உணர்ச்சிகளுக்கு அப்பாலிருந்த வேறொரு உலகை.

நான் குழந்தையாகவும் இளைஞனாகவும் இருந்த போது உணர்ந்ததற்கு நேர்மாறான உணர்வை இப்போது கொண்டிருக்கிறேன்: எனது நடு நாயகமான உலகம் இப்போது இஸ்தான்புல். இதற்குக் காரணம் நான் என் வாழ்நாள் முழுவதையும், கடந்த முப்பத்தி மூன்று ஆண்டுகளாக அங்கு செலவழித்ததற்காக மட்டுமல்ல, நான் அதன் தெருக்களை, பாலங்களை, மக்களை, நாய்களை, வீடுகளை, மசூதிகளை, நீரூற்றுகளை, வினோதமான கதாநாயகர்களை, பிரபலமான பாத்திரங்களை, கடைகளை, இருட்டு மூலைகளை, பகல் பொழுதுகளை, இரவுகளை என் அங்கங்களாக்கிக் கொண்டு, அவை அனைத்தையும் அரவணைத்துக் கொண்டு இருந்திருக்கிறேன். நான் என் சொந்தக் கைகளால் உருவாக்கிய இந்த உலகம், என் தலைக்குள் மட்டுமே இருந்த உலகம், நான் வாழ்ந்த லௌகீக உலகை விட உண்மையாக இருந்தது. இச்சமயத்தில்தான் உருவாக்கப்பட்ட மனிதர்களும் வீதிகளும் பொருள்களும் கட்டிடங்களும் அவர்களுக்குள் பேச ஆரம்பித்து விட்டது போலிருந்தன. நான் முற்றிலும் எதிர்பார்க்காத



2006ஆம் ஆண்டு நோபல் பரிசு பெற்றவர்கள் அனைவருடனும் ஓரான் பாமுக். இடமிருந்து வலமாக: ஜான் சி. மாதர், எட்மண்ட் எஸ். பெல்ப்ஸ், ரோஜர் கோர்ன்பெர்க், டிபால் சந்திரா பருவா (கிராமின் வங்கி பிரதிநிதி), ஓரான் பாமுக் , ஆண்ட்ரூ இசட். ஃபயர், கிரேக் சி. மெல்லோ, முஹம்மது யூனுஸ் மற்றும் ஜார்ஜ் எஃப். ஸ்மூத். 12 டிசம்பர் 2006 இந்தப் படம் எடுக்கப்பட்டது.

வகையில் அவை ஒருவருக்கொருவருடன் தொடர்புகொள்ள ஆரம்பித்தன. என் கற்பனையில் எழுந்த புத்தகங்களாக இல்லாது அவர்களுக்காக வாழ ஆரம்பித்தன. கிணற்றைத் தோண்ட ஊசியைப் பயன்படுத்திய மனிதனை விட நான் உருவாக்கிய இந்த உலகம் நம்பும்படியாக இருந்தது.

என் தந்தையின் கைப்பெட்டியை உற்று நோக்கிய போது அவரும் என்னைப் போல் அவர் எழுதிய காலத்தில் சந்தோஷம் அடைந்திருப்பார் என்று நான் நினைத்தேன். நான் அவரைப் பற்றி முன்கூட்டிய முடிவுகளை எடுக்கக் கூடாது. நான் அவருக்கு மிகவும் கடன்பட்டவனாய் இருந்தேன்: ஒரு பொழுதும் அவர் கட்டளையிடுபவராக, தடை செய்பவராக, அடக்குபவராக, தண்டிப்பவராக இல்லாத தந்தையாக இருந்தார். அதே சமயம் எனக்குச் சுதந்தரம் அளித்து, கனிவுடன் என்னை வளர்த்தார். சுதந்தரத்தையோ இளமைக் காலத்தையோ நான் எண்ணிப் பார்க்கும் தருணங்களில் அவர் என் நண்பர்களின் தந்தைகளைப் போல இல்லாதிருந்தார் என்று எனக்குப் பட்டது. அவரிடம் எனக்கு ஒருபோதும் பயம் ஏற்பட்டதில்லை. என் தந்தை அவரது இளமைக் காலத்தில் நாட்டம் கொண்ட எழுத்துதான் என் இளமையில் எனக்கு ஏற்பட்டது என்று பல முறை நினைத்திருக்கிறேன். நான் அவரைப் பொறுமையுடன் படிக்க வேண்டும். ஹோட்டல் அறைகளில் இருந்து கொண்டு அவர் எழுதியவற்றை நான் புரிந்துகொள்ள முயல வேண்டும்.

இத்தகைய நம்பிக்கை தரும் நினைப்புகளுடன் என் தந்தை விட்டுச் சென்ற இடத்திலேயே இன்னமும் இருந்த கைப்பெட்டியை நெருங்கினேன். என் வசமிருந்த மன உறுதியுடன் சில கையெழுத்துப் பிரதிகளையும் நோட்டுப் புத்தகங்களையும் படித்தேன். என் தந்தை என்ன எழுதியிருந்தார்? ஜன்னல் வழியே தெரிந்த பாரிஸ் நகர ஹோட்டல்கள், சில கவிதைகள், முரண்பாடுகள், பகுப்பாய்வுகள்... இதை எழுதும் போது போக்குவரத்து விபத்தில் சிக்கிக்கொண்ட ஒருவன் எப்படி நடந்ததென்று நினைவுபடுத்திக் கொள்ளத் தடுமாறும் அதே சமயம் அதிகமாக நினைவு வருவதைக் கண்டு நடுங்குவதைப் போல என்னை நான் உணர்ந்தேன். நான் சிறுவனாய் இருக்கும் போது என் பெற்றோர் சண்டை போட்ட பின் ஒருவித மயான அமைதி வீட்டில் நிலவும். அப்போது என் தந்தை அந்தச் சூழலை மாற்ற ரேடியோவைப் போடுவார். அதிலிருந்து வரும் இசை எல்லாவற்றையும் விரைவில் மறக்கடித்து விடும்.

சில இனிமையான வார்த்தைகளின் மூலம் அந்த ரேடியோ இசையைப் போல நான் எழுத விரும்புகிறேன். என் போன்ற எழுத்தாளர்களிடம் அடிக்கடி கேட்கப்படும் ஒரு கேள்வி: எதற்காக எழுதுகிறீர்கள்? எழுத வேண்டும் என்னும் உள்ளார்ந்த உந்துதலினால் நான் எழுதுகிறேன். மற்றவர்களைப் போல என்னால் பொதுவான வேலையை, பணியைச் செய்ய முடியவில்லை. நான் படிக்கும் புத்தகங்களைப் போன்று நான் எழுத விரும்புகிறேன். உங்கள் மீதும், ஒவ்வொருவர் மீதும் நான் கோபம் கொள்வதால்

எழுதுகிறேன். நாள் முழுவதும் ஓர் அறைக்குள் உட்கார்ந்து கொண்டு எழுதும் விருப்பத்தினால் எழுதுகிறேன். வாழும் வாழ்க்கையை மாற்ற வேண்டும் என்பதை ஒரு கைம்மாறு போலச் செய்ய எழுதுகிறேன். நாம் எம்மாதிரியான வாழ்க்கையை வாழ்கிறோம் என்று மற்றவர்களும், நாம் எல்லோரும், இந்த உலகம் முழுவதும் அறிய வேண்டும் என்று எழுதுகிறேன். இஸ்தான்புல்லின், துருக்கியின் வாழ்க்கையைப் பற்றி எழுதுகிறேன். நான் உபயோகிக்கும் தாள், பேனா, மசி ஆகியவற்றின் வாசனை எனக்குப் பிடித்திருப்பதால் எழுதுகிறேன். மற்ற எதையும் விட எனக்கு இலக்கியமும் நாவலும் பிடித்திருப்பதால் எழுதுகிறேன். எழுதுவது எனது பழக்கம், எனது வெறி. நான் மறக்கப்பட்டு விடுவேனோ என்னும் பயத்தால் எழுதுகிறேன். எழுத்து கொண்டு வந்து தரும் புகழும் ஆர்வமும் என்னை எழுத வைக்கின்றன. நான் தனியாக இருக்க விரும்புவதால் எழுதுகிறேன். நான் ஏன் மிகுந்த கோபத்துடன் உங்கள் மீதும் ஒவ்வொருவர் மீதும் எரிச்சல் கொள்கிறேன் என்பதைப் புரிந்துகொள்ள எழுதுகிறேன். நான் படிக்கப்பட வேண்டும் என்பதால் எழுதுகிறேன். ஒரு நாவலை, கட்டுரையை, ஒரு பக்கத்தை எழுத ஆரம்பிக்கும் போது, அதை முடித்து விட வேண்டும் என்று எழுதுகிறேன். எல்லோரும் நான் எழுத வேண்டும் என்று எதிர்பார்ப்பதால் நான் எழுதுகிறேன். நூலகங்கள் அமரத்துவம் உடையவை என்னும் என் சிறுபிராயத்து நம்பிக்கையில் என் புத்தகங்கள் புத்தக அலமாரிகளில் இருக்க வேண்டும் என்று எழுதுகிறேன். வாழ்க்கையின் அழகுகளையும் செல்வாக்குகளையும் வார்த்தைகளில் கொண்டு வர வேண்டும் என்று எழுதுகிறேன். நான் சொல்வதற்காக அல்ல, உருவாக்குவதற்காக ஒரு கதையை எழுதுகிறேன். நான் போக வேண்டிய, ஆனால், போக முடியாதவாறு தடுக்கும் உற்பாதத்திலிருந்து தப்பிக்க எழுதுகிறேன். நான் சந்தோஷமாக இருக்க முடிந்ததில்லை என்பதால் எழுதுகிறேன். நான் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதற்காக எழுதுகிறேன்.

என் வசம் அவரது கைப்பெட்டியைக் கொடுத்துவிட்டுச் சென்ற ஒரு வாரம் கழித்து என் அறைக்கு என் தந்தை வந்தார்; வழக்கம் போல நாங்கள் வாழ்க்கை, அரசியல், குடும்ப வம்பு ஆகியவற்றைப் பற்றிப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தோம். அவர் கைப்பெட்டியை விட்டுச் சென்ற இடத்தில் அவர் பார்வை விழும் தருணம் வந்தது. நான் அந்தக் கைப்பெட்டியை நகர்த்தியிருந்ததைக் கவனித்தார். நாங்கள் ஒருவரையொருவர் உற்று நோக்கினோம். அதைத் தொடர்ந்து ஓர் கனமான மௌனம் நிலவிற்று. நான் அவரிடம் கைப்பெட்டியைத் திறந்து சிலவற்றைப் படித்தேன் என்பதைச் சொல்லவில்லை. மாறாக நான் வேறெங்கோ பார்வையைச் செலுத்தினேன். ஆனால், அவர் புரிந்துகொண்டார். அவர் புரிந்துகொண்டார் என்பதை நான் புரிந்துகொண்டேன் என்பதை அவர் புரிந்துகொண்டார். ஆனால், இந்தப் புரிதல் சில நொடிகளுக்கே தொடர்ந்தது. ஏனெனில் என் தந்தை எதையும் சுலபமாக எடுத்துக்கொள்ளும் இயல்பையும் பெற்றவர். தன் மீது நம்பிக்கை கொண்டவர். என்னைப் பார்த்து வழக்கம் போலப் புன்னகை செய்துவிட்டு அவர் வெளியே சென்றார்.

அவர் மகிழ்ச்சியாய் செல்லுவதை வழக்கம் போல நான் சற்றுப் பொறாமையுடன் பார்த்தேன். அவரது சுதந்திரமான அசைக்கமுடியாத மனப்பாங்கை வியந்தபடி. ஆனால், அன்று எனக்குள் இனம்தெரியாத ஒருவித சந்தோஷம் பரவியிருந்ததை அவமானத்துடன் உணர்ந்தேன். அவரைப் போல வாழ்க்கையின் சௌகரியங்களை நான் அனுபவிக்கவில்லை என்பது ஒரு காரணமாக இருக்கலாம். நான் சந்தோஷமாக, கட்டற்ற ஒரு சுதந்தரப் பறவையாக அவரைப் போலில்லை; அதற்குப் பதிலாக எழுத்துக்கு என்னை அர்ப்பணிப்பதில் குறியாயிருந்தேன்- உங்களுக்கு நான் சொல்வது புரிகிறது என்று நினைக்கிறேன்... என் தந்தையை வைத்து இம்மாதிரி நான் நினைப்பது எனக்கு அவமானமாக இருந்தது. ஒரு பொழுதும் எனக்கு எந்த விதத் தொந்திரவும் தராது என்னிஷ்டம் போல் நான் நடக்க அனுமதித்த என் தந்தை! எழுத்தும் இலக்கியமும் வாழ்க்கையில் நம்முடைய மகிழ்ச்சிக்கும் குற்ற உணர்ச்சிக்கும் ஆழ்ந்த தொடர்பைக் கொண்டுள்ளன என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

ஆனால், இந்தக் கதையின் இன்னொரு பாதி உடனடியாக என் நினைவுக்கு வந்து மேலும் அதிகக் குற்ற உணர்ச்சிக்குள் என்னைத் தள்ளியது. முப்பத்திமூன்று ஆண்டுகளுக்கு முன் இந்தக் கைப்பெட்டியை என் தந்தை கொடுத்த போது அதற்கடுத்த நான்கு ஆண்டுகள் கழித்து நான் என் 22ஆம் வயதில் நாவலாசிரியனாக ஆக வேண்டும் என்று நினைத்தேன். மற்ற எல்லாவற்றையும் உதறிவிட்டு, ஓர் அறைக்குள் தாழிட்டுக் கொண்டு உட்கார்ந்து என்னுடைய Cevdet Bey and Sons என்னும் முதல் நாவலை எழுதி முடித்தேன். நடுங்கும் கரங்களுடன் தட்டச்சு செய்யப்பட ஓர் பிரதியை தந்தையின் கையில் கொடுத்தேன். அதை படித்துவிட்டு அவர் என்ன நினைக்கிறார் என்பதை அறியும் பொருட்டு. அவரது ரசனையையும் அறிவாற்றலையும் முன் வைத்து மட்டுமல்ல, நான் அதைக் கொடுத்தது எனக்கு அவருடைய கருத்து மிக மிக முக்கியம் என்பதால். என் தாயைப் போல அவர் நான் எழுத்தாளனாவதைத் தடுக்க முயலவில்லை. அச்சமயத்தில் என் தந்தை எங்களுடன் இல்லாமல் தொலை தூரத்தில் இருந்தார். நான் அவருடைய வருகைக்காகப் பொறுமையற்றுக் காத்திருந்தேன். இரு வாரங்கள் கழித்து அவர் வந்ததும் நான் கதவைத் திறக்க ஓடினேன். வந்ததும் அவர் ஒன்றும் சொல்லவில்லை. மாறாக என்னை இறுகத் தழுவிக்கொண்டதன் மூலம் அவர் என் நாவலை மிகவும் விரும்பினார் என்று தெரிந்தது. சிறிது நேரம் உணர்ச்சிகரமான அந்தப் பொழுது நிசப்தத்தில் திளைத்தது. நாங்கள் பேச ஆரம்பித்த போது என் தந்தை உரத்த குரலில் என் மீதுள்ள நம்பிக்கையையும்

*என் முதல் நாவல் பற்றியும் வியந்துரைத்தார். ஒரு நாள் நான் இப்போது நின்று கொண்டிருக்கும் இந்த இடத்தில் கிடைக்கும் பரிசை மிகுந்த மகிழ்ச்சியுடன் அடைவேன் என்றார்.*

*தன்னுடைய கருத்தை வலியுறுத்துவதற்காக அவர் இவ்வாறு கூறவில்லை. அல்லது இந்தப் பரிசு என்னுடைய இலக்காக இருக்க வேண்டும் என்று அவர் குறிப்பிடவில்லை. மகனை ஆதரிக்கும் ஒரு துருக்கியத் தந்தையாக அவர், "ஒரு நாள் நீ பாஷாவாக ஆவாய்" என்றார். அதன் பின் பல வருடங்களுக்கு என்னைப் பார்க்கும் போதெல்லாம் இந்த வார்தைகளைக் கூறி உற்சாகப்படுத்துவார்.*

*டிசம்பர் 2002இல் என் தந்தை காலமானார்.*

*இன்று எனக்கு இப்பரிசை - கௌரவத்தை - அளித்த சுவீடிஷ் அகாதெமிக்கும் அதன் மேன்மை வாய்ந்த குழுவினருக்கும் மற்றும் இங்கு வருகை புரிந்திருக்கும் அறிஞர்களுக்கும் முன்பு நிற்கிறேன். என் தந்தை இங்கு நம்முடன் இருந்தால் என்ற எண்ணத்தைத் தவிர்க்க முடியாதபடி.*

"ஸிந்துஜா" <weenvy@gmail.com>

---

**ஓரான் பாமுக்கின் 'வெண்ணிறக்கோட்டை', 'கருப்புப் புத்தகம்', 'இஸ்தான்புல்', 'பனி', 'என் பெயர் சிவப்பு' ஆகிய நூல்கள் தமிழில் மொழிபெயர்ப்பாகியுள்ளன. வெளியீடு: காலச்சுவடு பதிப்பகம்.**

# காணாமல் போன க.நா.சு.

**ஸ்ரீநிவாச கோபாலன்**

க.நா.சு. விமர்சனத்துறையில் இறங்கிய காலத்திலிருந்தே தமிழ்ச் சிற்றிதழ்களில் அவர் எழுதிய கட்டுரைகள் விதவிதமான விவாதங்களைக் கிளப்பிக்கொண்டிருந்தன. 'மணிக்கொடி', 'தினசரி' 'சூறாவளி', 'சரஸ்வதி', 'எழுத்து', 'தீபம்' இதழ்களில் க.நா.சு. தன் எழுத்துகளின் மூலம் இலக்கியச் சர்ச்சைகளைத் தொடங்கி வைத்தார். 1965ஆம் ஆண்டு வாக்கில் க.நா.சு. தமிழ்நாட்டிலிருந்து காணாமல்போய்விட்டார். சுமார் 20 வருடங்கள் தில்லியில்தான் வாழ்ந்தார். தில்லி வாழ்க்கையின்போது தமிழில் அவரது படைப்புகள் சொற்பமாகவே வெளியாகியுள்ளன.

தமிழ்ப் பத்திரிகையில் அவரது எழுத்துகளைக் காண்பது அரிதாக இருந்த அதே காலகட்டத்தில் இந்திய மற்றும் அயல்நாட்டு ஆங்கிலப் பத்திரிகைகளில் அவரது எண்ணற்ற படைப்புகள் வெளியாகிக்கொண்டே இருந்தன. பல்லாயிரம் பக்கங்கள் வரும் க.நா.சு.வின் ஆங்கிலப் படைப்புகள் மிகக் குறைவாகவே நூலாக்கம் பெற்றுள்ளன. வெளியான சில ஆங்கில நூல்களில் மிக முக்கியமானது Tamil Short Stories. முதல்முறையாக ஆங்கிலத்தில் வெளியான தரமான தமிழ்ச் சிறுகதைகளின் தொகுப்பு இதுதான். இதற்கு முன் 1963ஆம் ஆண்டில் அரசாங்க ஆதரவுடன் ஒரு தொகுப்பு வெளியானது. அதைப்பற்றி 'இலக்கிய வட்ட'த்தில் மதிப்புரை எழுதிய க.நா.சு., 'தமிழுக்குத் தீங்கு செய்யும் தொகுப்பு' என்று எழுதியிருக்கிறார். அடுத்த 15 ஆண்டுகளில் க.நா.சு. தொகுத்து வெளியிட்டிருக்கும் நூல் தமிழுக்கு நன்மை செய்யும் முயற்சியாக அமைந்திருக்கிறது.



எழுபதுகளில், தில்லியிலிருந்து இயங்கிய 'ஆதர்ஸ் கில்ட் ஆஃப் இந்தியா' என்ற எழுத்தாளர்கள் கூட்டமைப்பு இந்திய மொழிகளிலிருந்து சிறந்த சிறுகதைகளைத் தேர்ந்தெடுத்து ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து வெளியிடத் திட்டமிட்டது. அந்தத் திட்டத்தின்படி 1978ஆம் ஆண்டு Tamil Short Stories என்ற நூல் வெளியானது. அதைத் தொகுத்தவர் க.நா. சுப்ரமண்யம். 19 தமிழ் எழுத்தாளர்களின் சிறுகதைளைத் தேர்ந்தெடுத்து விரிவான முன்னுரையுடன் இத்தொகுப்பை உருவாக்கினார் க.நா.சு.. இத்தொகுப்புக்காக பல சிறுகதைகளைத் தானே மொழிபெயர்த்தார். அசோகமித்திரன், இந்திரா பார்த்தசாரதி, வெங்கட் சாமிநாதன் ஆகியோரும் சில கதைகளை மொழிபெயர்த்துள்ளனர். ஆல்பெர்ட் பிராங்களின், ரிச்சர்டு கென்னடி என்ற இரு அமெரிக்கர்களும் சில கதைகளை மொழிபெயர்த்துள்ளனர்.

'க.நா.சு.வின் விமர்சன முகம்' ('சுவடு', 1978) என்ற கட்டுரையில் சுந்தர ராமசாமி இந்த நூலைப்பற்றியும் குறிப்பிடுகிறார். க.நா.சு. 1959ஆம் ஆண்டு 'எழுத்து' பத்திரிகையின் முதல் ஏட்டில் எழுதிய கட்டுரையில், தான் உருவாக்கும் சிறந்த தமிழ்ச் சிறுகதைகளின் தொகுப்பில் யார்யார் கதைகள் இடம்பெறும் என்று கூறியிருந்ததை நினைவுகூரும் சு.ரா., Tamil Short Stories தொகுப்பில் க.நா.சு.வின் தேர்வுகள் சற்று மாறியிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். இந்தத் தொகுப்பில் க.நா.சு. தேர்வுசெய்துள்ள எழுத்தாளர்கள் பற்றி வெங்கட் சாமிநாதனும் எழுதியிருக்கிறார். ஆகஸ்டு 1979இல் வெளியான 'யாத்ரா' 13வது இதழில் இந்நூல் குறித்து வெ.சா. எழுதிய விரிவான



விமர்சனம் வெளிவந்துள்ளது. Tamil Short Stories தொகுப்புக்கு க.நா.சு. எழுதிய முன்னுரையின் தமிழாக்கமும் அதே இதழில் இடம்பெற்றுள்ளது. வெ.சா. தன் விமர்சனத்தைத் தொடங்குவதற்கு முன்பாக தொகுப்பில் இடம்பெற்ற 19 பேரின் கதைகளையும் பட்டியலிட்டுக் கொடுத்திருக்கிறார். நா. ஜெயராமன், சார்வாகன் போன்ற சில எழுத்தாளர்களின் கதைகள் விடுபட்டிருப்பது குறித்தும் கேள்வி எழுப்புகிறார்.

1978 வந்த முதல் பதிப்புக்குப் பிறகு, இரண்டாவது பதிப்பு 1980ஆம் ஆண்டில் வந்திருக்கிறது. அதை 'ஆதர்ஸ் கில்ட் ஆஃப் இந்தியா'வுடன் இணைந்து விகாஸ் பப்ளிஷிங் ஹவுஸ் வெளியிட்டது. இந்தத் நூல் க.நா.சு.வின் நூல் பட்டியலில் இருந்தாலும், இதுவரை காணக்கிடைக்காத நூலாக இருந்தது.

சில மாதங்களுக்கு முன்பு விநோதமான வடிவில் இந்த நூல் கிடைத்தது. தற்செயலாக Selected Tamil Short Stories என்ற தலைப்பில் ஒருநூல் அகப்பட்டது. அந்த நூலின் அட்டையிலும் முதல் பக்கத்திலும் Edited by Rajendra Awasthy என்று போட்டிருக்கிறது. ஆனால், உள்ளே இருப்பதோ க.நா.சு. தொகுத்த Tamil Short Stories நூல்தான். 'யாத்ரா'வில் இடம்பெற்ற கதைப்பட்டியல், க.நா.சு.வின் தொகுப்புரை இரண்டையும் வைத்து கிடைத்திருப்பது க.நா.சு.வின் நூல்தான் என்று நிச்சயமாகத் தெரிகிறது. ஆனால், அட்டையிலும் முதல் பக்கத்திலும் முன்னுரையின் முடிவிலும்

Indian Author, Volume 11, Authors Guild of India, 1986

On behalf of
AUTHORS GUILD OF INDIA
COOPERATIVE SOCIETY

VIKAS PUBLISHING HOUSE PVT. LTD.

JANGPURA EXTENSION
NEW DELHI - 110014

has brought out

in its Vikas Library of Modern Indian Writing the following collections of short stories:

Assamese Short Stories —Edited by Nirmalprabha Bardoloi
Gujarati Short Stories —Edited by Sarala Jagmohan
Hindi Short Stories —Edited by Rajendra Awasthy
Malayalam Short Stories—Edited by K. Ayyappa Panikar
Oriya Short Stories —Edited by J. P. Das
Punjabi Short Stories —Edited by G. S. Khosla
Sindhi Short Stories —Edited by Motilal Jotwani
Tamil Short Stories —Edited by Ka Naa Subramanyam



க.நா.சு.வின் பெயருக்குப் பதிலாக ராஜேந்திர அவஸ்தி என்ற பெயர் உள்ளது. ஒவ்வொரு கதையின் முடிவிலும் கொடுக்கப்பட்டுள்ள மொழிபெயர்ப்பாளர் பெயர் மாற்றப்படவில்லை. எட்டு கதைகளை க.நா.சு. மொழிபெயர்த்துள்ளார் என்று தெரிகிறது. கிடைத்திருக்கும் நூல் ஒரு திருட்டுப் பதிப்பு என்பது சந்தேகமே இல்லாமல் புலப்படுகிறது.

ஆதர்ஸ் கில்டு வெளியிட்ட முதல் பதிப்பில் பொதுப் பதிப்பாசிரியர் ஜி. எஸ். கோஷ்லாவின் முன்னுரை ஒன்றும் இருந்திருக்கும். ராஜேந்திர அவஸ்தியின் பெயரில் இப்போது கிடைத்திருக்கும் கள்ளப்பதிப்பில் கோஷ்லாவின் முன்னுரை இல்லை. Fusion Books என்ற பதிப்பகம் தயாரித்துள்ள இந்தக் கள்ளப்பதிப்பு 2004ஆம் ஆண்டு அச்சாகியிருக்கிறது.

க.நா.சு.வின் தொகுப்பில் கைவரிசை காட்டியிருக்கும் ராஜேந்திர அவஸ்தி, ‘ஆதர்ஸ் கில்ட் ஆஃப் இந்தியா’வின் முக்கியப் பொறுப்புகளில் இருந்திருக்கிறார். தமிழ்த் தொகுப்பை தன் பெயரில் மாற்றிக்கொண்ட அவஸ்தி மலையாளம், பஞ் சாபி மொழி தொகுப்புகளுக்கும் இதே வழியில் கள்ளப்பதிப்புகளை வெளியிட்டிருக்கிறார் போலும். கிடைத்துள்ள தமிழ் தொகுப்பில் ஒரு புத்தக விளம்பரம் உள்ளது. அவஸ்தி பெயரில் இந்தி, மலையாளம், பஞ்சாபி மொழி கதைத் தொகுப்புகளும் ஆங்கிலத்தில் வந்திருப்பதாகத் அந்த விளம்பரம் கூறுகிறது. இவற்றில் இந்தி தவிர மற்ற மற்ற இரண்டும் கள்ளப்பதிப்புகளாகவே இருக்கக்கூடும். இன்னொரு விளம்பரம் உறுதி இதற்குச் சான்றாக உள்ளது.

ஆதர்ஸ் கில்ட் அமைப்பின் Indian Author பத்திரிகையில் 1986ஆம் ஆண்டு வெளியான விளம்பரம் ஒன்றில் ஆதர்ஸ் கில்ட் அமைப்பும் விகாஸ் பப்ளிஷிங் ஹவுஸும் இணைந்து வெளியிட்ட நூல்களில் பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது. (காண்க: Indian Author, Volume 11, Authors Guild of India, 1986 விளம்பரம்)

இந்த விளம்பரத்தின்படி இந்தித் தொகுப்பை மட்டுமே ராஜேந்திர அவஸ்தி தொகுத்திருக்கிறார். இதிலிருந்து, தமிழ்த் தொகுப்பைப் போலவே, ஐயப்பப் பணிக்கர் தொகுத்த மலையாளத் தொகுப்பும், ஜி. எஸ். கோஷ்லா தொகுத்த பஞ்சாபி தொகுப்பும்கூட அவஸ்தியின் பெயரில் கள்ளப்பதிப்பாக வந்திருப்பதை அறிய முடிகிறது.

ராஜேந்திர அவஸ்தி, ஆதர்ஸ் கில்ட் ஆஃப் இந்தியாவில் செயலாளர், தலைவர் போன்ற பொறுப்புகளை வகித்துள்ளார். க.நா.சு.வும் இதே அமைப்பில் துணைத் தலைவர் பொறுப்பில் இருந்திருக்கிறார். ராஜேந்திர அவஸ்தியை க.நா.சு. கட்டாயம் அறிந்திருப்பார். ஆனால், இவரைப்பற்றி க.நா.சு. எழுத்துகளிலிருந்து எந்தக் குறிப்பும் கிடைக்கவில்லை.

க.நா.சு. தொகுத்த நூலை ராஜேந்திர அவஸ்தி சொந்தம் கொண்டாடியது பதிப்பு முறைகேடு என்று விமர்சித்தாலும், அவரது அசட்டுத்தனமான

# பலிபீடம்

ருஷ்ய நாவல்

மூல ஆசிரியர்: அலெக்ஸாண்டர் குப்ரின்

மொழிபெயர்ப்பாளர்: புதுமைப் பித்தன் & க. நா. சுப்ரமண்யம்

இது நீதி போதிக்கும் நூல் அல்ல. உள்ளதை உள்ளபடி சொல்லி அதில் வாசகர்களுக்கு அருவருப்பு ஏற்படும்படி எழுதப்பட்ட நாவல் இது. யாமா என்கிற இந்த நூல் தனிப்பெருமை வாய்ந்தது. விபசாரிகளைக் கதாநாயகிகளாக வைத்து எழுதப்பட்ட பல நாவல்கள் இருக்கலாம். ஆனால் சதை வியாபாரத்தையே விஷயமாக வைத்து தாசிக்குப் பதில் தாசித் தொழிலையே கதாநாயகியாக வைத்து எழுதப்பட்ட இந்த நூலில் ரஷ்யாவில் மட்டுமல்ல உலகத்திலுள்ள பலிபீடங்கள் எல்லாவற்றிற்குமே நிரந்தரமான உருவம் கொடுத்திருக்கிறார் குப்ரின் என்பதுதான் இந்த நூலின் தனிச் சிறப்பு.

காலிகோ பவுண்டு விலை ரூ 3.

'பலிபீடம்' விளம்பரம் 'தாருல் இஸ்லாம்', டிசம்பர் 1953

'கபாடபுரம்' முதல் பதிப்பின் பதிப்புரை

செயலுக்கு நன்றியும் சொல்லலாம். நூல் முகப்பில் க.நா.சு.வின் பெயர் காணாமல்போயிருந்தாலும், அசல் பதிப்பு கிடைக்காத நிலையில் இந்த நகல் பதிப்பு கிடைத்ததை எண்ணி மகிழலாம்.

'Tamil Short Stories' போல மற்றொரு நூலின் மறுபதிப்புகளிலும் க.நா.சு.வின் பெயர் காணாமல் போயிருக்கிறது. அது, அலெக்ஸாண்டர் குப்ரினின் 'பலீபீடம்'. இது ரஷ்ய நாவலாசிரியர் குப்ரின் எழுதிய Yama என்ற நாவலின் முதல் பாகத்தின் மொழிபெயர்ப்பு. குப்ரின் எழுதியதில் முக்கியமான படைப்பாகப் போற்றப்படும் இந்த நூலைப் புதுமைப்பித்தன், க. நா. சுப்ரமண்யம் இருவரும் சேர்ந்து தமிழுக்குத் தந்துள்ளனர். ஆனால், இப்போது கிடைக்கும் மறுபதிப்புகளில் புதுமைப்பித்தன் பெயர் மட்டும்தான் இடம்பெறுகிறது. க.நா.சு.வின் பெயரைக் காணமுடியவில்லை. இந்த மறுபதிப்புகளைப் பார்க்கும் ஒருவருக்கு 'பலிபீட'த்தை புதுமைப்பித்தனே முழுவதும் மொழிபெயர்த்தார் என்ற எண்ணம்தான் உருவாகும். அதுமட்டுமின்றி, தமிழ் மட்டும் அறிந்த வாசகர்கள் இந்த நூலை குப்ரினின் 'Yama' நாவலின் முழுமையான மொழிபெயர்ப்பு என்று கருதுவதற்கும் வாய்ப்பு உள்ளது. 'பலிபீட'த்தின் பிழையான மறுபதிப்புகளுக்குக் காரணம் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள 'பலிபீடம்' முதல் பதிப்பு வெளியான வரலாற்றை அறியவேண்டும்.

குப்ரினின் 'Yama' நாவலை மொழிபெயர்க்க விரும்பிய புதுமைப்பித்தன், முதல் 9 அத்தியாயங்களை மட்டும் மொழிபெயர்த்து தனது நண்பர் மீ. ப. சோமுவுக்கு 1945ஆம் ஆண்டு அனுப்பியுள்ளார். வி.ஆர்.எம். செட்டியாரிடம் கொடுத்து நூலாக வெளியிட ஏற்பாடு செய்யுமாறு சோமுவுக்கு புதுமைப்பித்தன் கடிதம் எழுதியுள்ளார். பிரதியை அனுப்பிவிட்டுக் காத்திருந்திருந்த புதுமைப்பித்தன், 1946இல் சோமுவுக்கு இன்னொரு கடிதமும் எழுதி வெளியீட்டு நிலவரம் பற்றி விசாரித்துள்ளார். (காண்க: 'கபாடபுரம்' முதல் பதிப்பின் பதிப்புரை)

வெளியீடு தொடர்ந்து தாமதமாகவே கையெழுத்துப் பிரதி புதுமைப்பித்தனிடமே திரும்பி வந்துவிட்டது. இதனால் வேறு பதிப்பாளரிடம் கொடுக்க முடிவுசெய்த புதுமைப்பித்தன், 1947ஆம் ஆண்டில் அ.கி. கோபாலனைச் சந்தித்து, 'பலிபீடம்' உள்பட பல படைப்புகளின் கையெழுத்துப் பிரதிகளை அவரிடம் ஒப்படைத்துள்ளார். அவற்றைப் பெற்றுக்கொண்ட அ.கி. கோபாலன் வெளியீட்டு உரிமைக்காக ஒரு தொகையையும் புதுமைப்பித்தனுக்குக் கொடுத்திருக்கிறார்.

அ.கி. கோபாலனிடம் கொடுத்தவை நூலாக வெளியாவதற்குள் புதுமைப்பித்தன் அமரராகிவிட்டார். அ.கி. கோபாலனிடம் ஒப்படைக்கப்பட்ட கையெழுத்துப் பிரதியில் 'Yama'-வின் முதல் 9 அத்தியாயங்களின் மொழிபெயர்ப்பு மட்டுமே இருந்தது. இதனால், அவர் எஞ்சிய அத்தியாயங்களை மொழிபெயர்த்துக் கொடுக்கும் பொறுப்பை க.நா.சு.விடம் வழங்கினார். அதன்படி க.நா.சு.வும் மீதி அத்தியாயங்களை மொழிபெயர்த்துக் கொடுத்துவிட்டார்.

1948ஆம் ஆண்டு அ.கி.கோபாலனின் 'காதம்பரி' பத்திரிகையில் 'பலிபீடம்' தொடராக வெளிவந்தது. அதன்பின், 1951ஆம் ஆண்டில் தமிழ்ச்சுடர் நிலையம் வாயிலாக புத்தகமாகவும் வெளியாகியுள்ளது. முதல் பதிப்பின் முகப்பில் மொழிபெயர்ப்பாளர் என புதுமைப்பித்தன் பெயர் மட்டுமே இடம்பெற்றுள்ளது.

நூலின் உள்ளே அ.கி. கோபாலன் எழுதியுள்ள அறிமுகத்தில் புதுமைப்பித்தன் மொழிபெயர்க்காத எஞ்சிய பகுதியை க.நா.சு. மொழிபெயர்த்துக் கொடுத்தார் என்ற குறிப்பு உள்ளது. 'பலிபீட'த்தை அடுத்து வெளியான 'கபாடபுரம்' (1951) நூலின் பதிப்புரையிலும் க.நா.சு. 'பலிபீட'த்தைப் பூர்த்திசெய்து கொடுத்தது பற்றிய குறிப்பு உள்ளது.

புதுமைப்பித்தனின் மொழிபெயர்ப்பு வெளியாவதற்காக க.நா.சு. செய்த உபகாரத்தை அ.கி. கோபாலன் இரண்டு இடங்களில் பதிவுசெய்துள்ளார். இருந்தும் முதல் பதிப்பின் முகப்பில் மொழிபெயர்ப்பாளராக க.நா.சு. பெயர் இல்லாமல்போனதற்கு வேறு காரணங்கள் இருக்கலாம். அ.கி. கோபாலனின் பதிப்பு முயற்சிகளுக்கு, குறிப்பாக மொழிபெயர்ப்பு நூல்களை வெளியிடுவதற்கு க.நா.சு. முக்கியமான தூண்டுதலாகவும் உறுதுணையாகவும் செயல்பட்டிருக்கிறார். புதுமைப்பித்தனிடம் நெருங்கிய நட்பும் மதிப்பும் கொண்டிருந்த க.நா.சு., அவர் மொழிபெயர்த்த நூலைப் பூர்த்திசெய்து வெளியிட மனமுவந்து உதவியிருப்பார். 'பலிபீடம்' புதுமைப்பித்தன் பெயரிலேயே வெளியாகலாம் என்றும் அவரே பரிந்துரைத்திருக்கலாம். அதை ஏற்றுக்கொண்ட அ.கி. கோபாலன் முதல் பதிப்புக்கு எழுதிய அறிமுகக் குறிப்பில் க.நா.சு. மொழிபெயர்த்த பகுதியைப் பற்றிக் கூறி நன்றி செலுத்தியிருக்கிறார் எனக் கருதலாம்.

நூல் முகப்பில் க.நா.சு. பெயர் இடம்பெறாவிட்டாலும் தமிழ்ச்சுடர் நிலையம் சார்பில் வெளியான 'பலிபீடம்' நூலுக்கான விளம்பரங்களில் மொழிபெயர்ப்பாளர்களாக புதுமைப்பித்தன், க.நா. சுப்ரமண்யம் இருவர் பெயரையும் இடம்பெறச் செய்திருக்கிறார் அ.கி. கோபாலன். (காண்க: 'பலீபீடம்' விளம்பரம் 'தாருல் இஸ்லாம்', டிசம்பர் 1953)

பின்னர், வேறு பதிப்பகங்கள் 'பலிபீட'த்தை வெளியிட்டபோதுதான் தவறுகள் நேர்ந்துள்ளன. முதல் பதிப்பில் அ.கி. கோபாலன் எழுதிய அறிமுகக் குறிப்பை நீக்கிவிட்டு, புதுமைப்பித்தன் மட்டும் மொழிபெயர்த்த நூலாகவே அச்சிட்டுவிட்டனர். வழிவழியாக வெவ்வேறு பதிப்பகங்கள் ஒரே தவறைச் செய்துள்ளன. இதனால், நூலில் கணிசமான பகுதியை க.நா.சு. மொழிபெயர்த்திருக்கும் செய்தி பலரும் அறியாத ரகசியமாகவே உள்ளது.

'பலிபீட'த்தில் க.நா.சு. மொழிபெயர்த்த பகுதியில் குறிப்பிடவேண்டிய இன்னொரு அம்சம் அத்தியாயங்களின் எண்ணிக்கை. ஆங்கில மொழிபெயர்ப்பின்படி, 'Yama' நாவலின் முதல் பாகத்தில் 12 அத்தியாயங்களே உள்ளன. ஆனால், 'பலிபீட'த்தில் 13 அத்தியாயங்கள் உள்ளன. பிற்பகுதியை மொழிபெயர்த்த க.நா.சு. 12வது இயலை இரண்டாகப் பிரித்து 13வது இயலாக ஆக்கியிருப்பதுதான் இதற்குக் காரணம்.

க.நா.சு. மொழிபெயர்ப்பு பற்றி இரண்டு இடங்களில் கூறும் அ.கி. கோபாலன், அத்தியாயங்களின் எண்ணிக்கை கூடியிருப்பது பற்றி எதுவும் தெரிவிக்கவில்லை. முதல் பதிப்பில் எழுதியுள்ள குறிப்பில், ஆங்கில மூலத்தைக் கருதி, 'பாக்கி 10, 11, 12 ஆக மூன்று அத்தியாங்களையும்' க.நா.சு. தமிழாக்கித் தந்தார் என்று கூறுகிறார்.

க.நா.சு. நூல்களின் வெளியீட்டில் நேர்ந்திருக்கும் பிழைகள் என்று இன்னும் பலவற்றைச் சொல்லலாம். இக்கட்டுரை க.நா.சு.வின் பெயர் மறைக்கப்பட்டு வெளியான இரண்டு நூல்களைப் பற்றி மட்டும் பதிவுசெய்து நிறைவடைகிறது. 'Tamil Short Stories', 'பலிபீடம்' இரண்டுக்கும் குறைகள் இல்லாத மறுபதிப்பு தேவை. புதுமைப்பித்தன் விரும்பியபடி, குப்ரினின் 'Yama' நாவல் முழுமையாகத் தமிழுக்குக் கிடைக்க வேண்டும்.

ஸ்ரீநிவாச கோபாலன் <sharetosrini@gmail.com>

---

பயன்பட்ட நூல்கள் / இதழ்கள்:

'இலக்கிய வட்டம்', இதழ் 11, 1041964

'எழுத்து', இதழ் 1, ஜனவரி 1959

'யாத்ரா', இதழ் 13, ஆகஸ்டு 1979

'தாருல் இஸ்லாம்', டிசம்பர் 1953

Indian Author, Volume 11, Authors Guild of India, 1986 (Google Books)

சுந்தர ராமசாமி, 'மனக்குகை ஓவியங்கள்', காலச்சுவடு, முதல் பதிப்பு: 2011

Ka Naa Subramanyam (ed.), Tamil Short Stories, Authors Guild of India Cooperative Society, First edition: 1978 (Google Books)

Rajendra Awasthy (ed.), Selected Tamil Short Stories, Fusion Books, First Printed: 2004

அசோகமித்திரன், 'மவுனத்தின் புன்னகை', தி இந்து, முதல் பதிப்பு: 2017

புதுமைப்பித்தன், 'கபாடபுரம்', தமிழ்ச்சுடர் நிலையம், முதல் பதிப்பு: நவம்பர் 1951

தொ.மு.சி ரகுநாதன், 'புதுமைப்பித்தன் கதைகள்: சில விமர்சனங்களும் விஷமத்தனங்களும்', என்.சி.பி.ஹெச்., முதல் பதிப்பு: 1999

ஆ. இரா. வேங்கடாசலபதி (பர்), 'புதுமைப்பித்தன் மொழிபெயர்ப்புகள்', காலச்சுவடு, இரண்டாம் பதிப்பு: 2014

Alexander Kuprin, Bernard Guilbert Guerney (Tr.), Yama [The Pit], The Project Gutenberg eBook

# இந்திரலோகம்

**வேலு இராஜகோபால்**

**ஓவியம்: ரம்யா சதாசிவம்**

*இது புதுமைப்பித்தனின் பொன்னகரம் அல்ல. நவீனம் மினுக்கும் பொன்னகரம். அதிகாரமும் வசதியும் உள்ளவர்களின் நகரம். அது இல்லாதவர்களின் நரகம். ஆனாலும் இடம் கொடுப்பதில் இது யாருக்கும் பாகுபாடு காட்டுவதில்லை. இங்கே இருக்கும் இரண்டு கோடி மக்களில் ஒரு மனிதத் துகள், மஞ்சு; அவளுக்கேற்ற இன்னொரு துகள் இன்னும் கிடைத்தபாடில்லை.*

*அலுவலகத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தாள். எத்தனை முறை முயற்சித்தாலும் அவளால் ஏழரை மணிக்கு முன்னால் எழுந்திருக்க முடியவில்லை. கடிகாரம் ஏன் தான் இப்படி தலைதெறிக்க ஓடுகிறதோ? டோஸ்டரில் 'டக்'கென்ற ஓசையுடன் பிரெட் குதித்து மெலெழுந்து நின்ற சத்தம் கேட்டது. நிலைக் கண்ணாடியை விட்டு, சீப்பைக் கையில் எடுத்துக்கொண்டு கிச்சனுக்குப் போனாள். இந்த வீட்டில், இதை வீடென்று சொல்வது ஒரு பேச்சுக்குத்தான். 650 சதுரஅடி (ஃப்ளோர் ஏரியா); கிச்சன், பால்கனி, பெட்ரூம், கிச்சன் எனப் பல அறைகளாக 15 செ.மீ சுவர்களால் பிரிக்கப்பட்டிருக்கும் பெட்டி.*

*சீப்பைத் உச்சித் தலைமுடியிலே சொருகிவிட்டு, சிவந்திருந்த பிரட்டில் வெண்ணையைத் தடவி ஒரு கடி கடித்துக்கொண்டே இன்னும் இரண்டு பிரெட் துண்டுகளை டோஸ்டரில் வைத்து அதை ஆன் செய்தாள். நல்லவேளை எவனோ பிரெட்-பட்டரைக் கண்டுபிடித்தான். அது ஐரோப்பியனாகத்தான் இருக்கும் - நம்ம ஊர்க்காரன் என்னத்தைக் கண்டுபிடித்தான்? அதுஇல்லையென்றால் அவள்தினமும்பட்டினியுடன்அலுவலகம் போக வேண்டியிருக்கும்.*



*மெட்ரொ ஸ்டெஷனை நோக்கி நடக்கத் தொடங்கிய போது மணி எட்டுப் பத்தாகிவிட்டது. வழக்கம் போல அலுவலகத்தில் நுழைய ஒன்பது ஆகிவிடும். அதற்கு முன்னால் போய்விட வேண்டும் என்று பல முறை முயற்சி செய்து பார்த்துவிட்டாள். அம்மா அப்பாவுடன் தங்கியிருந்தால், காலையில் அம்மா உதவி செய்வாள். ஆனால், எப்போதும் எதையாவது சொல்லிக் கொண்டிருப்பாள். 'அதை அப்படிச் செய், இதை இப்படிச் செய்'. 'கண்ட்ரோல் ஃப்ரீக்'. அது பிடிக்காமல் தனக்கென்று கிடைத்த ஃபிளாட்டில் மஞ்சு மூன்றாவது மாடியில் தனியாக வசித்துவந்தாள். அம்மாவும் அப்பாவும் தம்பியின் குடும்பத்துடன் இருந்தனர். வர்ஷனி - நாத்தனார் - படாதபாடு படுகிறாள். ஒருவேளை இவள் அங்கிருந்தாலும் சண்டைதான் போட்டுக் கொண்டிருப்பாள். மாமியார்களுக்கும் கிழடுகளுக்கும் உரிய இந்திய குணம். தொணதொணப்பு. 'அப்பாட தப்பித்துவிட்டேன்'.*

*மஞ்சுவும் திருமணமாகி, சஞ்சயுடன் குடும்பம் நடத்திப் பார்த்தாள். ஆறு வருடங்கள். சகிக்கமுடியவில்லை. 'டாக்சிக்' என்று நினைவுபடுத்திக் கொண்டாள். ஒருவழியாக விவாகரத்து வாங்குவதற்குள் பத்துவருடங்கள் ஓடிவிட்டன. சமூகம், வக்கீல்கள், நீதிபதிகளுக்கு நன்றி சொல்ல வேண்டும். லட்சங்களை வாங்கிக்கொண்டு, இத்தோடு விட்டார்களே! குடும்பத்தைக் காப்பாற்றுங்கள், என்று அறிவுரை வழங்குகிற நீதிபதிகள், பெண்களின் உரிமைகளைப் பாதுகாக்காமல், இந்தியச் சமூகத்தை, அதன் புரையோடிப்போன மரபுகளைக் காப்பாற்ற முனைந்திருக்கிறார்கள். ஆணாதிக்கச்*

சகதியில் மூழ்கிப் போனவர்கள். கணவனிடமிருந்து விவாகரத்து வாங்குவதை விட நீதிமன்றத்திலிருந்து விடுதலை பெறுவது அவ்வளவு கடினமாக இருந்தது.

அவ்வப்போது 'இன்னொரு திருமணம் முடித்துக் கொள்' என்று அம்மாவும் அப்பாவும் சொல்வதைக் கண்டு கொள்ளாமல் விட்டுவிடுவாள். அவளுக்குப் பயம். வருகிற மாப்பிள்ளைக்கும் பயமாக இருக்கும். ஒருமுறை பட்ட வலி. 'யார் கஷ்டப்படுவது?' அவர்களும் களைத்துப் போய் இதைப் பற்றிப் பேசுவதை குறைத்துக் கொண்டார்கள். அவ்வப்போது வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிவிடும். அவள் இறக்கிவிட வேண்டும். தனக்காக மட்டுமே வாழ்கிற புருஷனுக்காக வாழ அவள் தயாராக இல்லை. இதுவெல்லாம் புதியதா? அந்தக் காலத்திலும் சிலர் இப்படி இருந்திருப்பார்கள்.

விவாகரத்துக்கு முன்னால் பிள்ளைகள் பெற்றிருந்தால் நன்றாக இருந்திருக்கும். அவர்களுடன் மனநிறைவோடு வாழலாம். அதிலும் சிக்கல் இருந்திருக்கும். பிள்ளைகளைப் பங்கு போட்டுக்கொள்வதில் வழக்கு முடிவுக்கு வர இன்னும் பல ஆண்டுகள் ஆகியிருக்கும். நரக வேதனை இன்னும் பல வருடங்கள் தொடர்ந்திருக்கும். பிள்ளை இல்லாததால் வழக்குப் பத்து வருடத்தில் முடிந்துவிட்டது. அப்பாட...

இப்போது கூடப் பிள்ளை பெற்றுக்கொள்ளலாம். 'லாம்'. அவளுக்கு விரும்பம்தான். விஞ்ஞானத்தில் இடமிருக்கிறது. ஆனால்,இந்தச் சமூகம்! பெண்களுக்கு எதிரானவர்களால், பெண்களுக்கு எதிரானதாகக் கட்டப்பட்டிருக்கிறது. புருஷனில்லாமல்...? பலர் கோபத்தில் மயக்கம் போட்டு விழுந்துவிடக் கூடும். உதாரணத்துக்கு அவளுடைய அப்பா. ஏன் இப்படி ஒரு சிஸ்டம் அமைந்திருக்கிறது? ஒரே ஆளுடன் சாகும்வரை இருக்க வேண்டுமாம். அவனுக்குச் சேவை செய்வதே கடமை. இதில் பெண்களுக்கு என்ன என்ன விருப்பம் என்று எவனாவது கேட்டதுண்டா? அடிமையாக இருக்க வேண்டும். தனியானவளாக இருந்தால் குழந்தை பெற்றுக்கொள்ளக் கூடாது. எல்லாம் ஆண்களுக்குச் சாதகமாக அமைந்திருக்கிறது'.

மெட்ரோ ஸ்டேஷனில் ஒரே கூட்டம். முதல்பெட்டி பெண்களுக்கு. கொஞ்சம் தேவலை. மெட்ரோவில் பஸ்போல நெரிசல் இல்லை. தேவையில்லாத எரிச்சலூட்டும் உரசல்கள் இல்லை. ஆண்கள் மாறிவிட்டார்களா? சில நேரம் அப்படித் தோன்றுகிறது. இரண்டாவது ஸ்டேஷன் கடக்கும் போது உட்கார இடம் கிடைத்தது. ஏர்கண்டிஷனின் இதம் இப்போதுதான் உடலில் தெரிந்தது. மெட்ரோவின் வெளிச்சக் கடலும் இதமான சூழலும் பெட்டிகள் சுத்தமாக இருப்பதும் ஆண்கள் ஒழுங்காக இருப்பதற்கு ஒரு காரணமோ? என்று தோன்றியது. இந்த நகரத்தில் முண்டியடித்துக் கொண்டு ஏறினாலும், வேண்டுமென்று யாரும் இடிக்கிற மாதிரி அவள் உணர்ந்ததில்லை. மெட்ரோவில் பெண்கள் மீதான, பாலியல் தொல்லைகள் குறைந்திருப்பது போல் தோன்றியது. சமூகம் மாறிக்கொண்டுதான் இருக்கிறது. மிகமெதுவாக. உன்னிப்பாக நெடுநாள்கள் கவனித்தால் புலப்படலாம்.

ஒரு பெண் தன் குழந்தையைத் தூக்கிக்கொண்டு நின்றிருந்தாள். பக்கத்தில் பல இளவட்டங்கள் - ஆணும் பெண்ணும் - வேறு எதைஎதையோ பார்த்தபடி, குழந்தையை கைகளில் வைத்திருக்கும் பெண்ணை மட்டும் பார்க்காதபடியான பாவனையில், உட்கார்ந்திருந்தனர். மெட்ரோவின் அசைவுகளுக்கேற்ப அவளும் குழந்தையும் ஆடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காலத்து பஸ்ஸில் போவதற்கு இது எவ்வளவோ தேவலை. இன்னொரு பெண்குழந்தை அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு அருகில் நின்று கொண்டிருந்தது. அதுவும் ஆடிக் கொண்டிருந்தது. குழந்தைகளுக்கும் முதியவர்களுக்கும் உட்கார இடங்கொடுக்கும் நாகரீகம் இன்னும் டெல்லிக்கு வந்து சேரவில்லை. இன்னும் எந்த நாடுகளில் இருக்கிறதோ? அதுவும் தெரியவில்லை. இன்னொரு பிறவி எடுத்தால் அதிலாவது நாம் நாகரீகம் அடைவோமா? எந்தச் ஜென்மத்தில் செய்த பாவத்திற்காக இந்தப் பெண் இந்தியாவில் பிறந்தாள்? இப்படி நாகரீகமற்ற சமூகத்தின் பார்வையில் நின்று கொண்டிருக்கிறாள்? அவள் கணவன் வீட்டில் எங்காவது தூங்கிக்கொண்டிருபான்! தண்ணியடித்துக் கொண்டிருப்பான்!

குழந்தை மட்டும் பெற்றுகொண்டு வாழவேண்டும் என்பது அவள் விருப்பம். குழந்தையுடன் கூடவே கணவன் என்ற ஆண் மிருகத்தை நினைத்து அவளால் திருமணம் செய்துகொள்ள முடியவில்லை. 'மெல்லிய தொடுகையில் திறந்துகொள்ளும் 'டச் ஃபோனைக் கூட, அழுத்தித் திறக்கும் மனிதர்கள்' என்று எங்கோ படித்தது ஞாபகம் வந்தது. அம்மாவிடம் 'குழந்தையை மட்டும் பெற்றுக்கொள்ளலாமா என்று யோசிக்கிறேன்' என்று வெளிப்படையாகச் சொன்ன போது, அதிர்ச்சியில் 'பைத்தியம் பிடிச்சிருச்சா, உனக்கு?' என்று அரைமணி நேரம் விரிவுரை வழங்கிவிட்டாள். அந்தப் பேச்சை எடுத்தாலே அவளுக்கு மூளையில் தீப்பிடித்துவிடும். காணாக்குறைக்கு காது சரியாகக் கேட்காத அப்பாவிடம் ஒருதடவை போட்டுக் கொடுத்துவிட்டாள். அவர் 'தையத் தக்கா' என்று ஆடத்தொடங்கிவிட்டார். அடங்க வெகுநேரமானது. அவர்களுக்கு என்ன பதில் சொல்ல வேண்டும் என்று மஞ்சுவுக்குத் தெரிந்தாலும், அப்போதைக்குப் பின்வாங்கிவிட்டாள். இல்லையென்றால் அடக்க முடியாத கோபத்தில் அவருக்குப் பிளட் பிரஷர் ஏறி ஏடா கூடமாக ஏதாவது ஆகிவிடும்.

'இது என்னுடைய உடம்பு. பிள்ளை பெறும் வசதியை இயற்கை எனக்குக் கொடுத்திருக்கிறது. நான் பெற்றுக்கொள்ள முடியும். உதவி செய்ய ஒரு ஆண் இருந்தால் போதுமே! இப்போது அது

கூடத் தேவையில்லை. கருத்தரிப்பு மையத்துக்குச் சென்றால் போதும்! வேலை முடிந்துவிடும். இதற்கு ஏன் ஒரு ஆணையும் குழந்தையோடு தூக்கி வைத்துக்கொண்டு வாழ்நாளெல்லாம் கொஞ்சிக் கொண்டிருக்க வேண்டும்? இன்னும் அவளுக்குத் தைரியம் வரவில்லை. வீட்டில் அம்மா அப்பா, தம்பி என்ன சொல்வார்கள்? வீட்டை விட்டு விலக்கி வைத்துவிடலாம். அவளுக்கு அம்மா, அப்பா, தம்பி உறவுகள் வேண்டும். யாருமில்லாத அனாதையாக வாழ முடியாது. ஆனால், அவர்களுக்கு விளக்கிச் சொன்னாலும் புரிந்து கொள்ளமாட்டார்கள். என்ன எழவுடா இது? இந்தப் பைத்தியங்களுக்குப் புரியவில்லை. எவருக்கும் புரிய மாட்டேன் என்கிறதே! உடனே அந்தக் காலத்தில் அப்படி, குழந்தையின் நிலைமை, மனப் பிரச்சனைகள் என்று பெரிய கதையாக்கிவிடுவார்கள். பாதிக்கப்படும் பெண்ணைப் பற்றி எந்தக் கவலையும் இல்லை. குடும்பம் என்ன மனிதன் தோன்றிய நாளில் இருந்தே இருக்கிறதா? அதுவும் நடுவில் தோன்றியது தானே? நடுவில் வந்தது போய்த் தொலையட்டுமே! உலகத்தின் நிலைபற்றிக் கவலைப்பட்டுப் பேசும் மூதேவிகள், அதில் வாழும் பெண்கள் கஷ்டப்படுவதைப் பற்றிக் கவலைப்படுவதில்லையே!' 'முலைகள், எனது இரண்டு கண்ணீர்த் துளிகள்' என்று யாரோ எழுதியது சரிதானோ? தொங்கிக் கொண்டிருக்கும் இரண்டு துயரங்கள். பெண்களுக்கு அவற்றின்மேல் உரிமை கிடையாது. ஆண்களுக்காக அல்லது குழந்தைக்காக. 'என் உடல் என் உரிமை என்று முழங்க வேண்டும்' என்று தோன்றியது அவளுக்கு.

இப்போதெல்லாம் அடிக்கடி ஒரு யோசனை தோன்றுகிறது. ஒரு அழகான, அறிவாளியான ஆளிடமிருந்து பிள்ளை மட்டும் பெற்றுக்கொள்ள முடிந்தால்...! திருமணம் முடித்தவர்கள் தான் குழந்தை பெற்றுக்கொள்ள வேண்டும் என்று சட்டம் இல்லை. பள்ளிக் கூடத்தில் கூட அப்பாவின் பெயரைப் போட வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. 'பிறப்புச் சான்றிதழில் மட்டும் அப்பாவின் பெயர் வேண்டுமா? சொத்தில் பங்கு வைக்கவா? அப்பா பெயர் தெரியாத பிள்ளை என்பது ஏன் வசைச் சொல்லாக இருக்கிறது? அப்படி இருந்தால்தான் பெண்களை அடக்கிவைக்க முடியும்?'

மெட்ரோவிலிருந்து இறங்கி அலுவலகத்துக்கு நடக்கத் தொடங்கினாள். கூட்டம் கூட்டமாக மனிதர்கள் இங்கும் அங்கும் வேகமாக நடந்து கொண்டிருந்தார்கள். மொத்தமாக பிளாட்பாரத்திலிருந்து, நகரும் படிக்கட்டுகளுக்கும் அங்கிருந்து ரோட்டில் இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கத்திற்கும் பிறகு கலைந்தும் சென்றார்கள். இந்தப் பெரும்கூட்டம் இடித்துவிடாதபடி கைகால்களைச் சுருக்கி நகர்ந்து செல்லும் போது வேறு எதையுமே அவளால் யோசிக்க முடியவில்லை. எல்லாம் அனிச்சைச் செயல் போல நடந்து கொண்டிருந்தது. 'எல்லோருடைய வாழ்க்கையும் இப்படித்தான் போய்க்கொண்டிருக்கிறது. மற்றவர்களுடைய அசைவுகளைப் பொறுத்து. தானியங்கி பொம்மைகள் போல'. இந்தக் கூட்டத்தில் அவள் ஒரு அடையாளம் தெரியாத ஆள். 'இன்னொரு உயிரை உண்டாக்கி அதையும் இந்தப் பெருவெள்ளத்தில் ஒரு தூசியைப் போல் மிதக்கவிட வேண்டுமா?' என்றும் நினைத்தாள்.

அலுவலக அறைக்குள் புகுந்து கொண்டாள். மணி ஒன்பது இருபது ஆகிவிட்டது. அறையிலிருக்கும் இன்னொரு அதிகாரியான, பி.கே. கோஷ் வந்துவிட்டிருந்தான். இவளை 'இன்னைக்கும் லேட்தானா?' என்ற கேள்வியுடன் பார்த்தான். அதிலேதோ ஒரு திருப்தி. 'அவனுக்கென்ன, மனைவியிருக்கிறாள். அவளும் அலுவலகம் போகிறவள் என்றாலும் இவனுக்காகவும் குழந்தைகளுக்காகவும் சமையல் செய்துவிடுகிறாள். குழந்தைகளை பள்ளிக்குத் தயார் செய்கிறாள். இவன் அவர்களை பஸ் ஏற்றிவிட மட்டும் போகிறான். பிறகு அலுவலகம் சீக்கிரம் வருவதில் என்ன பிரச்சனை?' இதையெல்லாம் ஏதோ பெருமையாக நினைக்கிறான். அமைதியான குடும்பமாம். பெண் அமைதியானவளாம். 'என்ன உலகமோ?' அவளுக்குக் கடுப்பாகவே இருந்தது. கொஞ்சம் தன்னை அமைதிப்படுத்திக் கொண்டு ஃபைல்களைப் புரட்டத் தொடங்கினாள். அன்றைக்கே முடிக்கவேண்டிய வேலைகள் பல இருந்தன.

நடுவில் அவளுடைய மேலதிகாரி எஸ்.கே. ஷர்மா, இண்டர்காமில் அழைத்தார். அவர், ஒரு எம்.சி.பி. (மேல் சாவினிஸ்டிக் பிக் - ஆணாதிக்கப் பன்றி). பேசும் போது அமைதியாகப பேசுவார். ஆனால், பெட்ரனைசிங் டைப். சில நேரங்களில் கண்கள் கண்ட இடங்களை நோக்கி உருளும். பிறகு வேறெங்கோ பார்க்கும். இதை ஒன்றும் பெரியதாக எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. வேறெந்த கெட்ட பழக்கமும் கிடையாது. எதற்காக அழைத்தார் என்று யோசித்துக்கொண்டே மேலதிகாரியின் அறையில் நுழைந்தாள்.

அந்த அறையில் சுபோத் சஹாயும் இருந்தான். அவன் எஸ்.கே. ஷர்மாவுடன் பேசிக்கொண்டிருந்தான். அவ்வப்போது அவனைக் கவனித்தாள். நல்ல உயரம், நீண்ட மூக்கு, அழகிய முகம், அலுவலகத்தில் நல்ல பெயர். இவ்வளவு நாளும் அவனைக் கவனித்ததில்லை. அவள் குடியிருக்கும் அதே அபார்ட்மெண்ட் காம்ப்ளக்ஸில் குடியிருக்கிறான். ஆனால், அவனுடன் பேசியதில்லை. மரியாதை உண்டு. 'இவனிடம் பிள்ளை பெற்றுக்கொள்ளலாம். அறிவும் அழகும் கொண்டவன். வேறு எவனிடமாவது கேட்பதற்கு, இவனிடம் கேட்கலாம். அமைதியான குணம் கொண்டவன். பெண்களிடம் வழிகிறவன் அல்ல. ஆனால், பேசத் தயங்குகிறவனும் அல்ல. மரியாதையோடு பேசுகிறவன்'. பர்ஃபெக்ட் சாய்ஸ் என்று தோன்றியது. மனதில் குறித்துக் கொண்டாள்.



அன்றிலிருந்து அவனைக் கவனிக்கத் தொடங்கினாள். அலுவலகத்துக்கு எட்டுப் பத்துக்குக் கிளம்பி விடுகிறான். ரிக்ஷா பிடித்து மெட்ரோ ஸ்டேஷன் போகிறான். எட்டு இருபத்தி ஐந்துக்குள் மெட்ரோவில் ஏறிவிடுகிறான். அலுவலகம் முடிந்து எத்தனை மணிக்கு வருகிறான் என்று கண்டுபிடிக்கத்தான் பல நாட்கள் ஆயின. அவன் வருவதைக் காண என்றே அபார்ட்மெண்ட் காம்ப்ளக்ஸ் வாசலருகில் பல நாட்கள் சுற்றிச் சுற்றி நடந்து காத்திருந்தாள். மாலை வேளையில் காய்கறிக் கடையில் சந்திக்க முடிந்தது.

'நமஸ்தேஜி! உங்களைப் பார்ப்பதே அதிசயமாக இருக்கிறதே! இத்தனைக்கும் ஒரே காலனியில் இருக்கிறோம்!' என்றாள்.

'அலுவலகத்திலுருந்து வர ஒன்பது மணியாகிவிடுகிறது. அதற்கு மேல் எங்கும் போக மனமிருக்காது. காலையில் மீண்டும் ஓட்டம்' சிரித்துக்கொண்டே அவளுடன் வீட்டை நோக்கி நடந்தான். 'நான் ரொம்ப சின்சியர் ஆஃபீசராக்கும். நீ பார்ப்பதைவிட முக்கியமான வேலை பார்க்கிறேன்' என்று பீற்றிக்கொள்கிறானோ? அது உண்மைதான். அந்தப் பிரிவுகளுக்குப் போஸ்டிங் கிடைத்தால் வேண்டாமென்று அலுவலர்கள் தயங்குவார்கள். 'நமக்குவேலையாகும்வரை அவனைக்கண்டுகொள்ள வேண்டியதுதான்'. அவன் சொல்வதை ஏற்றுக்கொள்வதைப் போல சிரித்தாள்.

'உங்க செக்ஷனில் வேலை அதிகம்' என்றாள். 'ஆமாம், எதற்கெடுத்தாலும், 'சஹாயைக் கூப்பிடு' என்றாகிவிட்டது. செக்ரடரி எட்டு மணிவரை இருக்கிறார். அவருக்குக் கீழிருக்கும் எங்கள் ஆஃபீசர், அவர் இருக்கும் வரை ஆபீசில் இருக்கிறார். நானும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். நானும் இருக்கிறேன். இருபது வருடங்களாக இது பழகிவிட்டது' என்றான் அவன். அடிமை வம்சத்தின் தொடர்ச்சி.

'பொறுப்புள்ளவன், சுமைகள் அதிகமானால் தாங்கிக்கொள்கிறவன்.' மனதில் குறித்துக் கொண்டாள். 'இதுமாதிரி ஒருத்தன் எனக்கு ஏன் வாய்க்காமல் போனான்?' 'ஒரு நாள் டீ குடிக்க வாருங்கள்!' என்று அழைத்துவிட்டுப் பிரிந்து சென்றாள். இப்படித்தான் தொடங்கியது அவர்களது பழக்கம்.

பின்பு ஒருநாள் அவள் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பும் போது லேட்டாகிவிட்டது. சஹாய்க்குப் போன் செய்தாள். 'சஹாய், அலுவலகத்தில் லேட்டாகிவிட்டது. நீங்கள்...' சஹாய்க்குப் புரிந்துவிட்டது. இது வேண்டுமென்றே செய்ததாக இருக்கலாம். இப்போதெல்லாம் அவனுடைய பிரிவுக்கு அடிக்கடி வருகிறாள். 'சொல்லாமல் சொல்லொன்று சொல்வதில்லையா?' இருவரும் அலுவலகத்தை விட்டு ஒன்றாகக் கிளம்பிச் சென்றனர். சஹாய் வீட்டுக்குப் போன போது, அவன் மனைவி, பூர்ணிமா எப்போதும் போல் அவனுக்காகக் காத்திருந்தாள்.

மஞ்சுவை சஹாய் அறிமுகம் செய்து வைத்தான். கணவன், மனைவி இருவருடைய அலுவலகத்திலும் வேலை பார்க்கிறவர்கள் சிலர் வீட்டுக்கு வந்து போகிற பழக்கம். அது ஒன்றும் புதியதாகத் தெரியவில்லை. மஞ்சு முதல் முறையாக பூர்ணிமாவைக் கவனித்தாள். அவள் உடல் பெருத்திருந்தது. மிக அருமையாக ஆங்கிலம் பேசினாள். ஆங்கில ஆசிரியை. அன்று கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போனாள். மஞ்சுவுக்கு சஹாய் பேசுகிற ஆங்கிலமும் பிடித்திருந்தது. கணவனும் மனைவியும் கல்கத்தா பிரசிடன்சி கல்லூரியில் ஒரே வகுப்பில் ஆங்கில இலக்கியம் படித்தவர்கள்.

மஞ்சு தெரிந்து கொண்டது இதுதான். 'முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் கல்லூரியில் படிக்கும் காலத்திலிருந்து இருவருக்கும் பழக்கம். இப்போது அவளுக்கு சுகர், பி.பி. அதிகமாகிவிட்டது. முதலில் உடல் இப்படிப் பெருத்திருக்கவில்லை. எல்லாம் ஒரு குழந்தை பெற்றுக்கொள்ள வேண்டும் என்று வைத்தியம் பார்த்துப் பிள்ளை பெற்றுக் கொண்டதிலிருந்து மாறிவிட்டது.

ஹார்மோன் சிகிச்சை எடுத்துக்கொண்டால் இப்படி உடல் பெருத்துவிடும் என்று மஞ்சுவுக்குத் தோன்றியது. அவளுக்குத் தெரிந்த பலர் கருத்தரிப்புச் சிகிச்சைக்குப் பிறகு உடல் பெருத்து, சுகர் அதிகமாகி,

பி.பி அதிகமாகி கஷ்டப்படுவதைக் கவனித்திருக்கிறாள். குழந்தை வேண்டும்தான்! ஆனால், அதற்காக இப்படி உடல் நலத்தைச் சிதைக்க வேண்டுமா? இதை வெளியில் சொன்னால் அவளைப் பைத்தியக்காரி என்று சொல்வார்கள். குழந்தையில்லாமல் இருந்தால் என்ன? ஆனால், அப்படியெல்லாம் யாரிடமும் கேட்க முடிவதில்லை.

அடுத்த சனிக்கிழமை காலையில் சஹாய் வீட்டிலிருந்த போது மஞ்சுவிடமிருந்து அவனுக்குப் போன் வந்தது. அவளுக்குத் தெரியும். சஹாயின் மகள் பள்ளிக்குப் போய்விடுவாள். மனைவியும் அலுவலகத்துக்குப் போய்விடுவாள். சஹாய் வீட்டில் இருப்பான். 'என்ன, சஹாய், டீ குடிக்க வருகிறீர்களா?' எந்தக் குழைவும் இல்லாத மிகவும் காரியார்த்தமான குரல். சஹாய் என்ன செய்வதென்று யோசித்தான். 'போய்த்தான் பார்ப்போமே! போனஸாக ஏதாவது கிடைக்கக் கூடும். மஞ்சுவின் குரலிலும் நடத்தையிலும் ஆண்மையின் சாயல் இருந்தது. சஹாய் பெண்களைக் கண்டு மயங்குகிறவன் அல்ல. மஞ்சுவின் அழகோ வயதோ அவனை எதுவும் செய்துவிடவில்லை. அதையும் மீறிய ஒன்று அவனை உந்திச் சென்றது. காரியக்காரனாகவே அவன் யோசித்தான்.

ஒவ்வொரு சனிக்கிழமையும் காலை பத்துமணிக்கு மேல் சஹாய், மஞ்சுவின் வீட்டிற்கு போகத் தொடங்கினான். அது காதல் என்றோ, கவர்ச்சி என்றோ அவனுக்குத் தோன்றவில்லை. எப்போதாவது பக்கத்து வீட்டிலிருந்து பண்டிகைகளில் இனிப்புப் பலகாரம் கிடைக்குமே! அது போலத்தான். அவர்கள் டீ குடித்துக்கொண்டே பேசிக் கொண்டிருப்பது.

மன இடைவெளியும் உடல் இடைவெளியும் குறைந்துவிட்டிருந்த ஒரு நாளில் மஞ்சு அவனிடம் நேரடியாகவே சொன்னாள் 'சஹாய், எனக்கு வயதாகிக் கொண்டிருகிறது..' அவன் குறுக்கிட்டுச் சொன்னான் 'அப்படி ஒன்றும் உனக்கு வயதாகவில்லையே...' 'இல்லை நான் அதற்காகக் சொல்லவில்லை. ஒரு கேள்வி உன்னிடம் கேட்கலாமா? கொஞ்சம் சிரமமான கேள்விதான்' கேட்டுவிட்டு அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனும் சில நிமிடங்கள் அமைதியாக இருந்தான். மனைவியும் மகளும் நினைவில் வந்தனர். மனமும் உடலும் உடனே இறுகிவிட்டன. உள்ளே சிவப்பு விளக்கு எரியத் தொடங்கிவிட்டது. 'இனிக் கவனமாகப் பேசவேண்டும்'. திருமணம் முடித்துக்கொள்ளலாமா என்று கேட்பாளோ? அதெல்லாம் முடியாது. பூர்ணிமாவைக் காதலித்து, வீட்டின் எதிர்ப்பையும் மீறி பதிவுத் திருமணம் முடித்தவன். பிறகு அம்மா, அப்பா இருவரின் மனநிறைவுக்காக, அவளையே மரபு முறைப்படி எல்லோரும் கூடியிருக்க மீண்டும் திருமணம் செய்து கொண்டவன். ஒருநாளும் அவளை விட்டுவிட முடியாது. மஞ்சுவுடனான உறவு ஒரு தற்காலிக ஏற்பாடாக இருக்கலாம். 'ரிலேஷன்ஷிப் வித் பெனிஃபிட்ஸ்'. இப்படிச் சில கேள்விகளைப் பற்றி நிதானமாக யோசித்து ஒரு தீர்மானத்துக்கு வந்தவுடன் அவளிடம் சொன்னான் ' என்ன கேட்க விரும்புகிறாய்? இப்போது நீ கேட்கலாம்'. அவன் 'இவ்வளவு நேரம் என்ன யோசித்தான்? என்று மஞ்சுவுக்குத் தோன்றியது.

'எனக்கு ஒரு குழந்தை பெற்றுக்கொள்ள வேண்டும் என்று ஆசை. திருமணம் பண்ணிக்கொண்டு என்னால் ஒரு ஆணுடன் குடும்பம் நடத்த முடியவில்லை. இனிமேலும் முடியாது என்றே தோன்றுகிறது. உன்னால் ஒரு உபகாரம் பண்ண முடியுமா?'

சஹாய்க்கு அவள் என்ன சொல்ல வருகிறாள் என்று புரியவில்லை. திருமணம் முடித்துக்கொண்டால்தானே அது சாத்தியம். திருமணம் செய்து கொள் என்கிறாளா? திருமணம் வேண்டாம் என்கிறாள். மீண்டும் என்ன செய்வது என்று யோசித்தான். ஏதோ கிடுக்கிப் பிடி போடுகிறாள். வார்த்தைகளை விட்டுவிடக் கூடாது. இத்துடன் தொடர்பை முடித்துக்கொள்ள வேண்டியதுதான் என்று நினைத்துக்கொண்டான்.

'என்ன உதவி?' அவன் குரலில் ஒரு தயக்கம் இருந்ததை அவள் புரிந்துகொண்டாள்.

'எனக்கு ஒரு குழந்தையை மட்டும் கொடுத்துவிட்டு இந்த உறவை முடித்துக்கொள்ளலாம். எனக்கு வேறெதுவும் வேண்டாம். உன் பெயரே இதில் வராத அளவு நான் பார்த்துக்கொள்வேன். உன்னைப் பின்னால் எந்தத் தொந்தரவும் செய்ய மாட்டேன். உனக்கு எந்த பிரச்சனையும் வராது.'

சஹாய்க்கு தனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியை உள்வாங்கிக்கொள்ள சிறிது நேரம் ஆனது. அவனுடைய வார்த்தைகள் தட்டுத் தடுமாறி வந்தன 'அதெப் படி முடியும்?' கொஞ்ச நேரம் அமைதியாக இருந்தான்.

மஞ்சு தொடர்ந்தாள்: 'உன்னைப் போன்ற ஒரு புத்திசாலியான குழந்தை எனக்கு வேண்டும். அதனால்தான் உன்னைத் தேர்ந்தெடுத்தேன். திட்டமிட்டுத்தான் நான் இதைச் செய்கிறேன். நீ என்னை நம்பலாம். உன் பெயர் எந்த இடத்திலும் வராமல் நான் பார்த்துக்கொள்வேன். அதைப் பற்றிய பயம் உனக்கு வேண்டாம்.' மிக இயல்பாக ஆனால், தெளிவாகப் பேசினாள்.

சஹாய் மீண்டும் அமைதியானான். பயங்கரமான ஆளாக இருக்கிறாள். இதில் என்னென்ன ஆபத்துக்கள் இருக்கின்றன என்று தெரிந்துதான் பேசுகிறாளா? எல்லா இடத்திலும் குழந்தைக்குத் தகப்பன் யார் என்று கேட்பார்கள். என்ன பதில் சொல்வாள்? பின்னொரு நாளில் அவள் பெற்ற பிள்ளை, 'என் தந்தை யாரென்று' கேட்கும். ஒரே இடத்தில் வாழுகிறோம். முகச் சாடை காட்டிக் கொடுத்துவிடும். மனைவியின், மகளின் முன்னால் அவமானப்பட முடியாது. பின்னொரு நாளில், இவன் தகப்பன் என்று கோர்ட்டில் வழக்குத்



தொடுக்கலாம். மரபணு சோதனை செய்தால், உண்மை வெளிப்பட்டுவிடும். அலுவலகத்திலும் காலனியிலும் கேவலமாகிவிடும். சொந்தக்காரர்கள் என்ன நினைப்பார்கள்? அவனுடைய கற்பனையில் கேவலப்பட்டு வெட்கித் தலைகுனிகிற காரியமாகிவிடும்... சோஃபாவை விட்டு எழுந்து, அவன் பால்கனிக்கு நகர எத்தனித்தான். எழுந்த அவசரத்தில் கை பட்டு, அவன் டீ குடித்துவிட்டு சிறு மேஜையில் வைத்திருந்த கண்ணாடி கிளாஸ் கீழே விழுந்துநொறுங்கியது. அப்போதுதான் கவனித்தான். அவனுடைய வெள்ளைப் பைஜாமாவில் கிளாஸில் மிஞ்சியிருந்த டீ கொட்டிவிட்டிருந்தது. பேச்சுவாக்கில் அரை டம்ளர் டீயைத்தான் குடித்திருந்தான்.

'சாரி, வெரீ சாரி' சொல்லிவிட்டு, உடைந்த கிளாஸ் துண்டுகளை எடுக்க முயற்சி செய்தான். 'பரவாயில்லை, சஹாய், நான் எடுத்துக்கொள்கிறேன். உங்கள் கையை வைக்க வேண்டாம். குத்தி ரத்தம் வந்துவிடும்' என்று சொல்லிக்கொண்டே, பாத்ரூமில் இருந்து குப்பை அள்ளுகிற பிளாஸ்டிக் தட்டை எடுத்துவந்து, விளக்குமாற்றால் உடைந்த கண்ணாடித் துகள்களை எடுக்கத் தொடங்கினாள். 'நீ போய் பால்கனியில் நின்று கொள்' என்று சொன்னாள். அவன் பால்கனியில் போய் நின்று கொண்டான். அவன் மனதில் பதட்டம் இருந்தது. எப்படி இந்தச் சிக்கலில் இருந்து மீள்வது என்று நினைத்துக் கொண்டிருந்தான். மஞ்சுவுக்குப் புரிந்துவிட்டது. பயப்படுகிறான்.

அவன் கடிகாரத்தைப் பார்த்தான். முதலில் மகள் பள்ளியிலிருந்து வருவாள். இன்னும் அரை மணி நேரத்தில் ஸ்கூல் பஸ் வந்துவிடும். என்ன செய்யலாம் என்று யோசித்தான். அவள் சொன்னதை அவனால் ஜீரணிக்க முடியவில்லை. 'இப்படியும் ஒரு பெண் யோசிப்பாளா? ஏதாவது செய்தால் இவளிடம் மாட்டிக்கொள்வேன். இங்கே வருவது இதுதான் கடைசி முறையாக இருக்க வேண்டும்'. தெளிவாகப் பதில் சொல்லிவிடவேண்டும் என்று முடிவெடுத்தான். அதற்குள் அவள் உடைந்த கண்ணாடித் துண்டுகளை குப்பையில் போட்டுவிட்டு, கைகழுவி, வேறொரு கண்ணாடித் தம்ளரில் தண்ணீர் கொண்டுவந்து அவனிடம் கொடுத்தாள். அவள் தெளிவாக இருந்தாள்.

'நீங்கள் இவ்வளவு பதட்டம் அடையத் தேவையில்லை', அவள் சொன்னது ஆறுதலாக இருந்தது. தண்ணீரைக் குடித்தான். பிறகு சொன்னான்: 'எனக்கு நீ சொல்வதில் விருப்பம் இல்லை. அதில் பல பிரச்சனைகள் உருவாகும். நான் அவற்றை எதிர்கொள்ள முடியாது. ஒரு சபலத்தின் காரணமாக நான் வந்துவிட்டேன். அது தவறு என்றும் சொல்ல மாட்டேன். எனக்கும் ஒரு தேவையிருந்தது. உனக்கும் அந்தத் தேவை இருக்கிறது என்று நினைத்தேன். ஆனால், உனது திட்டம் வேறாக இருக்கிறது. அதில் நான் பங்குபெற விரும்பவில்லை. இத்துடன் நாம் இதை முடித்துக்கொள்வது நல்லது' என்று சொல்லிவிட்டு அவள் முகத்தைப் பார்த்தான்.

அவள் முகத்தில் தெரிந்த ஏமாற்ற உணர்வு அவனுக்குப் பயம் தந்தது. இதைக்கூட அவள் பிரச்சனையாக்க முடியும். அவள் கொஞ்ச நேரம் அமைதியாக இருந்துவிட்டுச் சொன்னாள் ' சரி, அது ஓ.கே.' அழுத்தி முகத்தைத் துடைத்துக்கொண்டாள். 'உண்மையிலேயே அவளால் எந்தப் பிரச்சனையும் வராதோ' என்று அவனுக்கு ஒரு நிமிடம் தோன்றியது. அவன் செல் போன் மணி அடித்தது. அவன் மனைவி. 'வீடு திரும்ப, கொஞ்சம் நேரம் ஆகும்' என்று குறுந்தகவல் அனுப்பியிருந்தாள். அவன் வீட்டுக்குச் செல்ல ஆயத்தமானான்.

அதற்கப்புறம் இருவரும் அலுவலகத்திலோ காலனியிலோ சந்தித்தாலும் ஹலோ சொல்லிக்கொண்டார்கள். அதற்குமேல் எதுவும் பேசவில்லை.

மஞ்சு அதற்கப்புறம், முதலில் வாசனிடமும் பிறகு ராஜேந்திரனிடமும் ரொம்ப நாட்கள் பேசிக் கொண்டிருந்தாள் என்று அவனுடைய நண்பன் சுனில் சொல்லிக் கொண்டிருந்தான். வாசனும் ராஜேந்திரனும் உயரமாக, திடமாக, அழகாக இருந்தார்கள். அவள் நினைத்தபடி இந்திரர்களாக இல்லை. மஞ்சு ரிடையர் ஆகும் வரை தனியாகத்தான் இருந்தாள்.

வேலு இராஜகோபால்
<vrajagopal59@gmail.com>

# சர்வதேச திரைப்பட விழா அரசியலும் லிற்றில் ஜப்னாவும்

**ரதன்**

பாலஸ்தீன அழிப்பு போருடன், உக்ரைன் ரஷ்ய போரும் தற்பொழுது நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. உலகெங்கும் பல்கலைக் கழக மாணவர்கள் காசாவில் வீசப்படும் குண்டுகளுக்கு எதிராக ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டு வருகின்றனர். இஸ்ரேல் இதற்கு எதிராக அரசுகளுக்கு அழுத்தம் கொடுத்து இந்த போராட்டங்களை முடக்க முயற்சித்து வருகின்றது. அதில் வெற்றியும் பெற்றுள்ளது. அமெரிக்கா, கனடா உட்பட்ட நாடுகளில் பல்கலைக் கழக மாணவர்களின் போராட்டங்களுக்கு எதிராக சட்ட நடவடிக்கைகளை மேற்கொண்டு போராட்டங்களை கட்டுப்படுத்தியுள்ளது. இதன் அடுத்த கட்டமாக கலைவடிவங்களினூடாக இஸ்ரேலுக்கு எதிராக ஏற்படுத்தப்படும் தாக்கங்களையும் கட்டுப்படுத்த முயற்சித்து வருகின்றது. நெட்பிளிக்ஸ் 32 பாலஸ்தீனப் படங்களை தனது இணையத்திலிருந்து நீக்கியுள்ளது. Dharamshala International Film Festival (DIFF)-இலிருந்து No Other Land, From Ground Zero படங்கள் நீக்கப்பட்டுள்ளன.

International Documentary Festival Amsterdam (IDFA), "From the river to the sea, Palestine will be free" சுலோகத்தை ஐடிஎப்ஏ குழுவினர் கண்டித்ததை, கண்டித்து 18 திரைப்படைப்பாளிகள் தங்களது படங்களை 2023ஆம் ஆண்டு திரைப்பட விழாவிலிருந்து மீளப் பெற்றனர்.

பல்கலைக் கழக மாணவர்கள் இஸ்ரேலுக்கு நிதியுதவி வழங்கும் நிறுவனங்களுக்கு எதிராகவும் குரலெழுப்பி வருகின்றனர்.

உலகின் ஐந்து பெரிய சர்வதேச திரைப்பட விழாக்களில் ஒன்றான ரொரன்ரோ சர்வதேச திரைப்படவிழாவிற்கு நீண்ட காலமாக நிதியுதிவிசெய்யும்தனியார் நிறுவனங்களில் ஒன்று றோயல் வங்கி(RBC). இந்த வங்கிக்கும் இஸ்ரேலுக்குமான தொடர்பைக் கண்டித்து



2024ஆம் ஆண்டு விழாவின் முதல்நாளன்று பிறின்ஸ் வேல்ஸ் அரங்கில் மாலை ஆறு மணிக்கு அமெரிக்க திரைப்படமான Nutcrackers திரையிடப்பட்டது. அரங்கின் முன்னாலும் அரங்கினுள்ளும் புகுந்து ஆர்ப்பாட்டம் செய்தனர். 'ஆர்.பி.சி. றோயல் வங்கிக்கு இஸ்ரேலுடன் தொடர்புகள் உள்ளன. எனவே,இவர்களிடமிருந்து நிதி பெறுவதனை நிறுத்து' போன்ற கோசங்கள் முன்வைக்கப்பட்டன. "RBC is killing our future, RBC funds genocide' போன்ற கோசங்கள் எழுப்பப்பட்டன. இதே விழாவில் பாலஸ்தீனப் படங்களான No Other Land, To a Land Unknown, From Ground Zero ஆகிய படங்கள் திரையிடப்பட்டன.

ரஷ்ய-உக்ரைன் போரை மையப்படுத்தி எடுக்கப்பட்ட படமான Russians At War படம் ரொரன்ரோ விழாவில் திரையிடப்படவில்லை. 'ரஷ்யன்ஸ் அற் வோர்' ஒரு கனடிய திரைப்படம். இதற்குரிவிஓன்ராரியோ 340,000 கனடிய டொலர்களை நிதியாக வழங்கியிருந்தது. ரிவி ஒன்ராரியோ அரசின் தொலைக் காட்சியகம். கனடிய மத்திய அரசின் ஊடக நிதியிலிருந்தும் ஒரு பகுதியை இப் படத்துக்கு ரிவி ஒன்ராரியோ வழங்கியிருந்தது. இப் படம் ஏற்கனவே வெனிஸ் சர்வதேச திரைப்பட விழாவில் திரையிடப்பட்டது. இப் படத்தின் இயக்குநர் ஒரு ரஷ்ய கனடியர். Anastasia Trofimova இந்த விவரணத் திரைப்படத்தின் இயக்குநர். ரஷ்யா, உக்ரைனை ஆக்கிரமித்த பகுதிகளில் ரஷ்யாவின் அனுமதியின்றி இப் படத்தை படம் பிடித்தாக இதன் இயக்குநர் ஊடகங்களுக்கு தெரிவித்திருந்தார். மேலும் அவர் ரஷ்யாவின், உக்ரைன் மீதான ஆக்கிரமிப்பை தான் கண்டிப்பதாகவும் கூறியிருந்தார். இருப்பினும் இப் படத்தை ரொரன்ரோ சர்வதேச திரைப்பட விழாவில் திரையிட வேண்டாம் என உக்ரைனியன் கனடிய கொங்கிரஸ் போராட்டத்தில் ஈடுபட்டது. இப்படத்தின் முதலாவது திரையிடல் செப்டம்பர் 13 ஆக இருந்தது. இப் படம் மூன்று நாட்கள்



திரையிடுவதாக இருந்தது (செப் 13,14,15) செப்டம்பர் 5-15 திரைப்படவிழா நடைபெற்ற காலம். இப் படத்தை கண்டித்து கனடிய உதவிப் பிரதமர் கிறிஸ்ரீன் பிறீலன்ட், ”கனடியர்களின் சொந்தப் பணத்தில் இவ்வாறான திரைப்படங்கள் தயாரிக்கப்படுவதும் திரையிடலுக்கு ஆதரவு கொடுப்பதும் சரியானதல்ல” (It's not right for Canadian public money to be supporting the screening and production of a film like this.) என்று தெரிவித்திருந்தார். முதலில் ரொரன்ரோ சர்வதேச திரைப்படவிழா அமைப்பினர் இப் படத்தை திரையிடலை உறுதிப்படுத்தியிருந்தனர்; எனினும் பின்னர் குறிப்பிட்ட நாளில் இப் படம் திரையிடப்படவில்லை. அதாவது ரொரன்ரோ சர்வதேச திரைப்பட விழாவில் திரையிடப்படவில்லை. திரைப்பட விழா முடிந்த பின்னர் செப்ரம்பர் 17 அன்று இரு காட்சிகளாக பல பாதுகாப்பின் மத்தியில் திரையிடப்பட்டது. ரிவி ஒன்ராரியோ இப் படத்தை அக்டோபர் மாதம் தொலைக்காட்சியில் திரையிடுவதாகவிருந்தது. அதனை ரிவி ஒன்ராரியோ ரத்துச்செய்துவிட்டது.

Russians at War-ஐ திரையிட மறுத்த விழாக்குழு, முற்று முழுதாக இஸ்ரேல் ஆதரவுப் படமான Bliss (Hemda)-ஐ திரையிட்டது. இப் படம் திரையிட்ட அரங்கின் முன்னாலும் ஆர்ப்பாட்டங்கள் இடம்பெற்றன.

கடந்த இரண்டு வருடங்களாக வெனிஸ், கான், பேர்லின் சர்வதேச திரைப்பட விழாக்கள் அரசியல் சர்ச்சைகளில் சிக்கிக்கொண்டுள்ளன. சர்வதேச திரைப்பட விழாக்கள் வெளிப்படுத்தும் அரசியல் ஆபத்தானது. இத்திரைப்பட விழாக்கள் நடைபெறும் நாடுகள் புலம்பெயர் மக்கள் அதிகமானவர்களைக் கொண்டவை;. இருப்பினும் இவ் விழாக்கள் புலம்பெயர் இனக்குழுக்களுக்கு எதிராக எடுக்கப்படும் படங்களை திரையிடத் தயங்குவதில்லை.

சர்வதேச திரைப்பட விழாக்களுக்கு மூன்றாம் உலக நாட்டு மக்களின் கதைகள் தேவை. ஆனால், அது மேற்கின் கருத்தியலுக்கு ஏற்ப இருக்கவேண்டும். அதே சமயம் மேற்கு நாடுகளில் வாழும் மக்களின் துயரங்களை மையப்படுத்தய படங்களை வரவேற்பதில்லை. ஆனால், இதே மக்களின் வாழ்வியல் வாழும் பிரதேசங்களை களங்கப்படுத்துவதாக வெளிவரும் படங்கள் வரவேற்கப்படுகின்றன. உலகின் முக்கிய சர்வதேச திரைப்பட விழாக்களின் அரசியல் இது. ரொரன்ரோ சர்வதேச திரைப்பட விழாவில் திரையிடப்பட்ட ஈழ பிரச்சினையை மையப்படுத்திய படங்கள் இதனையே வெளிப்படுத்துகின்றன.

ரொரன்ரோ சர்வதேச திரைப்பட விழாவில் பல படங்கள், ஈழப் போருக்கு முன்னரும் பின்னரும், போரை மையப்படுத்திய படங்கள் திரையிடப்பட்டுள்ளன. போருக்கு பின்னர் ‘இனி



அவன்' (அசோகஹங்கம), This Place (V.T.Nayani) Funny Boy (Deepa Metha) ஆகிய படங்கள் திரையிடப்பட்டுள்ளன.

இதன் தொடர்ச்சியாகவே 2024 ரொரன்ரோ சர்வதேச திரைப்பட விழாவில் திரையிடப்பட்ட 'லிற்றில் ஜப்னா' படமும் உள்ளது. இயக்குநர் திரையிடலின் பின்னர் பார்வையாளர்களின் கேள்விக்கு பதிலளிக்கையில் தனக்கு இரண்டு அடையாளங்கள் உள்ளன. ஒன்று தமிழன். இரண்டாவது பிரெஞ்ச் குடிமகன் என்றார். படத்தில், "நாட்டை விட்டு வெளியேறியவுடன் அடையாளம் அழிந்து விடுகின்றது" என்ற கருத்துப்படவும் ஒரு வசனம் உள்ளது.

M.G.Vassanji எழுதிய Nowhere, Exactly – On Identity and Belonging நூலில் 'Am I a Canadian Writer?' என்ற அத்தியாயம் வருகின்றது. இக் கேள்விபோல் நூலில் அடையாளம் பற்றிய பல கேள்விகள் எழுப்பப்படுகின்றன. கனடாவின் முதன் குடிகளின் எழுத்துக்களையும் கூட Indigenous writing என்றே வகைப்படுத்துகின்றார்கள். Vassanji அதனால் தான் ஒரு கனடிய எழுத்தாளரா எனக் கேள்வி கேட்கின்றார். தன்னை ஒரு பிரெஞ்ச் பிரசையாகவும் அதே சமயம் தமிழராகவும் உணரும் 'லிற்றில் ஜப்னா' இயக்குநர் படத்தில் என்ன கூற வந்துள்ளார்?

பிரான்சின் தலைநகர் பரிசில் உள்ள சிறுபகுதி லாச்சப்பல் (La Chapelle). தமிழர்களின் வணிக நிறுவனங்கள் அதிகமாக உள்ள பகுதி இது. சில மாதங்களுக்கு முன்னர் ரிக்ரொக் பதிவர் ஒருவரைத் தாக்கிய சம்பவம் இப் பகுதியிலேயே இடம்பெற்றது. லாச்சப்பலை குட்டி யாழ்ப்பாணம் எனவும் அழைப்பார்கள். மேற்கு நாடுகளில் ஒவ்வொரு சமூகத்தினரும் அதிகமாக வாழும் பகுதியை Liitle Italy, China Town, Little India போன்ற பெயர்களில் அழைப்பது வழமை.

லாச்சப்பல் பகுதியில் பாண்டிச்சேரி மக்களின் கடைகளும் உள்ளது. இப் பகுதி விடுதலைப் புலிகளின் ஆதிக்கத்தில் உள்ளது. அவர்களது கட்டுப்பாட்டுக்குள் இல்லை. விடுதலைப் புலிகள் 2009இல் அழிக்கப்படுவதற்கு முன்பாக, போருக்காக நிதிசேகரிக்கின்றார்கள். பாரிசில் விடுதலைப்புலிகளின் பொறுப்பாளராகவேல ராமமூர்த்தி உள்ளார். இவரே நிதி சேகரிப்புக்கும் பொறுப்பாளர். இவர்களுக்கென வாகனங்கள் உண்டு. வணிக நிறுவனங்கள் உண்டு. வேல ராமமூர்த்திக்கு பல தொண்டர்களும் உள்ளனர். இவர்கள் நிதி சேகரிப்புடன் ஆட்கடத்தல், போதை மருந்து விற்பனை போன்ற பலவற்றையும் செய்து வருகின்றனர். இவர்களது நடவடிக்கையை துப்புத்துலக்க பிரெஞ்ச் அரசு விரும்புகின்றது. அதற்காக கதாநாயகனை அனுப்புகின்றது. இயக்குநரே கதாநாயகனுமாக நடித்துள்ளார். வேல ராமமூர்த்தியன் வலது கரமான புவியுடன் நட்பை ஏற்படுத்தி விடுதலைப் புலிகளின் முகாமிற்குள் செல்கின்றார். இயக்குநர் தனது பாட்டி ராதிகாவால் வளர்க்கப்படுகின்றார். நாயகன் Michael Beaulieu – (இது இவரது பாத்திரத்தின் பெயர்) புலிகளின் நிதி சேகரிப்பின் பின்னால் நடைபெறுபவற்றை அரசுக்கு தெரியப்படுத்துகின்றார். இவரது பார்வையில் லாச்சப்பலில் உள்ள புலி அமைப்பினர் ஒரு அராஜகவாதிகள், காட்டுமிராண்டிகள். புலி உறுப்பினர்களாக காட்டப்படுபவர்களின் உடல் மொழி, உரையாடல் போன்றவை அவர்கள் ஒரு ஒடுக்கப்படும் இனத்துக்காக இயங்கும் போராளிகளாக வெளிப்படுத்தப்படவில்லை. மாறாக சுயமற்ற மானிடரற்றவர்களாகவே சித்திரிக்கப்பட்டுள்ளார்கள்.

காட்சிகள் மிக கவனமாக கட்டமைக்கப் பட்டுள்ளன. விடுதலைப் புலிகளின் போராட்டத்துக்கும், புலம்பெயர் புலிகள் அமைப்புக்களுக்குமிடையில் ஒரு முரண் - எதிர் நிலையுள்ளது என்று காட்டாமல், போராட்டத்தின் அங்கமாக இவ் அமைப்புக்கள் உள்ளன என




வெளிப்படுத்துகின்றார். ஈழம் போய்ஸ், ரெட் கோஸ்டி, சைபர் போன்ற பல குழுக்கள் லாச்சப்பல் பகுதியில் உள்ளன.

இவை உண்மையா? 1994ஆம் ஆண்டு விடுதலைப் புலிகளுடன் ஒரு காலத்தில் நெருக்கமாகவிருந்த சபாலிங்கம் பாரிசில் வைத்து விடுதலைப் புலிகளால் சுட்டுக்கொல்லப்படுகின்றார். புலம் பெயர் நாடுகளில் பல வன்முறைகள், தாக்குதல்கள் விடுதலைப் புலி அமைப்பினரால் நடாத்தப்பட்டுள்ளது. இதே 1994ஆம் ஆண்டு, ரொரன்ரோவில் அமைந்திருந்த தேடகம் நூலகம் புலிகளால் எரிக்கப்பட்டது. எரிக்கப்படுவதற்கு முன்னர் தேடகம், சபாலிங்கம் கொலையையும் யாழ்ப்பாணத்திலிருந்து முஸ்லீம்கள் வெளியேற்றப்பட்டமையையும் கண்டித்திருந்தது. புலம்பெயர் புலிகள் வன்முறைகள் அற்றவர்கள் எனக் கூறமுடியாது. அவர்கள் அராஜகவாதிகளே.

படத்தில் வரும் ஒரு காட்சியில் துரோகி என பிடிக்கப்பட்டவர் மீது பந்தொன்றை கிரிக்கெட் மட்டையால் அடிக்கின்றார் வேல ராமமூர்த்தி. தொடர்ந்து பந்து அவரை தாக்கும் பொழுது, வலி தாங்கமுடியாமல் அவர் மாடியிலிருந்து கீழே விழுந்து இறந்துவிடுகின்றார். இறந்தவர்களை பிரென்ச் அரசுக்குத் தெரியாமல் எரித்துவிடுகின்றனர். இவ்வாறான பல காட்சிகள் படத்தில் உள்ளன.

இயக்குநரின் நோக்கம் ஒரு கிரைம் திரில்லர் படமெடுப்பதாகும். விஜய் ரசிகரான இயக்குநர் படத்தின் கருத்தியலில் அக்கறை கொள்ளவில்லை. தனது நோக்கத்துக்கு தேர்ந்தெடுத்த களம் லாச்சப்பல். இயக்குநர் Lawrence Valin-இன் பெற்றோர் லிபியாவில் சந்தித்து திருமணம் செய்து பின்னர் பிரான்சில் அரசியல் தஞ்சமடைந்தவர்கள். லாரன்சின் தாய் வழிப் பாட்டி ஒரு சிங்களவர். லாரன்ஸ் வழமையான பொலிவூட் படங்களைப் போன்று ஒரு அதீதமான லாச்சப்பலை உருவாக்கியுள்ளார். விடுதலைப் புலிகள் போதை மருந்து விற்பனை செய்கின்றார்கள் என தொடர்ச்சியாக இலங்கை அரசு பிரச்சாரம் மேற்கொண்டு வந்துள்ளது. புலம் பெயர் நாடுகளில் போதை மருந்து விற்பனை செய்பவர்களை விடுதலைப் புலிகள் என இலங்கை அரசு தெரிவித்து வந்துள்ளது. ஆனால், அதற்கான ஆதாரங்கள் இது வரை முன்வைக்கப்படவில்லை. படத்தில் காட்டப்பட் அதீத வன்முறைக் காட்சிகள் யதார்த்தமற்றவை.

ஹொலிவூட் படங்களில் போராளிகள் குழுக்களை இவ்வாறே சித்திரிப்பார்கள். ஹொலிவூட் அரசியலின் மறுபிரதியே இப் படம். இதுவரை வெனிஸ், ரொரன்ரோ, சூரிச் ஆகிய திரைப்பட விழாக்களில் திரையிடப்பட்டுள்ளது. இப் படத்தின் பார்வையளர்களில் பெரும்பாலானோர் தமிழர்கள் அல்லாதவர்கள். இவர்கள் முன் இவ்வாறான ஒரு கருத்தியலைக் கொண்ட படத்தை கொண்டு செல்வதன் நோக்கத்தின் பின்னணி என்ன?

ரொரன்ரோ திரையிடலின் பின்னர் சமூக வலைத் தளங்களில் வெளிவந்த பல கருத்துக்கள் 'விடயம் புதியது.' 'விடுதலைப் புலிகள் மிகவும் மோசமானவர்கள்', இவற்றுடன் பொதுவாகவே 'குடிவரவாளர்கள் வன்முறையாளர்கள்' என்ற கருத்து நிலையும் முன்வைக்கப்பட்டது. ஐரோப்பிய நாடுகளில் வலது சாரி அமைப்புக்கள் குடிவரவாளர்களை வெளியேற்ற வேண்டும் என்ற கோசத்துடன் செயல்படுகின்றன. ஜேர்மனியின் வலதுசாரிக் கட்சியான ஏ.எப்.டி சகல குடிவரவாளர்களையும் வெளியேற்ற வேண்டும் எனக் கூறி வருகின்றது. இவர்களுக்கான படமாக இது அமைந்துவிட்டது.

இப்படமும் விடுதலைப் புலிகளினூடாக புலம்பெயர்ந்து வாழும் தமிழ் மக்களுக்கு எதிரான ஒரு கருத்தியலை உருவாக்கும் மேற்கின் அரசியலா என்ற கேள்வியும் எழாமல் இல்லை.

"ரதன்" <rathan100@gmail.com>

# சீ. பாஸ்கர் கவிதைகள்



## 1. வானத்தின் வாசிப்பு

வாசலில் வீசிச்சென்ற நாளிதழை
காற்று புரட்டியதும்
வாசிக்கத் தொடங்குகிறது
வானம்

## 2. பூக்களின் பக்தி

கோயில் வளாகத்தில்
உதிர்ந்திருக்கும் பூக்கள்
உருண்டு செல்கிறது காற்றில்
என்ன வேண்டுதலோ
இப்படி பக்தியுடன் செய்கிறது
அங்கப்பிரதட்சணம்

## 3. அம்மா அம்மாதான்

அன்னையர் தினம் பற்றி
அறியாத அம்மாவுக்கு
அன்னையர்தினவாழ்த்துகள்சொன்னேன்
அதெல்லாம் இருக்கட்டும்
நேரமாச்சு வந்து சாப்பிடு என்றாள்

## 4. துயிலெழுப்புதல்

தூங்கியெழுந்த குழந்தை
எழுப்புகிறது
தூங்கிக் கொண்டிருக்கும்
எல்லா பொம்மைகளையும்

## 5. அன்புப் பரிசு

தத்ரூபமாக செடியை
வரைந்த சிறுமிக்கு
மலரொன்றை புதிதாய் பூக்கச்செய்து
பரிசளிக்கிறது காகிதம்

## 6. பூக்களின் கருணை

நானும் அவளும்
நாள்தோறும் அமர்ந்து பேசும்
பூங்காவில்
காற்றில் உதிர்ந்த பூக்களில் இரண்டு
எங்களுக்காக இருக்கையில்
இடம் பிடித்து வைக்கின்றன
தாமதமாக வரும் நாட்களிலெல்லாம்



## 7. கடவுள்களின் பதற்றம்

ஒவ்வொரு நாளும்
வெவ்வேறு சாமியை வணங்கிவிட்டு
தேர்வெழுதச் சென்ற மாணவன்
பதற்றத்திலேயே வைத்திருக்கிறான்
அத்தனை சாமிகளையும்
தேர்வுமுடிவுகள் வரும்வரை

## 8. புது வரவு

பலூன்களை
பறக்கவிட்டுக் கொண்டிருக்கும்
குழந்தைகள்
தங்களுடன் விளையாட
சேர்த்துக் கொள்கின்றனர்
வானத்தையும்

## 9. கோயிலுக்கு வெளியேயும் கடவுள்கள்

தெருவோரம் குளிரில்
நடுங்கிக் கொண்டிருக்கும்
பெரியவருக்கு
போர்வையை கொடுக்கிறான் ஒருவன்

உணவகத்தின் வெளியே
கையேந்தி நிற்கும் பாட்டிக்கு
உணவளிக்கிறான் இன்னொருவன்

பார்வை சவால் உள்ள சிறுவனுக்கு
சாலையை கடக்க
கை கொடுக்கிறான் மற்றொருவன்

இன்னும் இருந்துகொண்டுதான்
இருக்கிறார்கள்
சில மனிதர்கள் இதுபோல்
கோயிலுக்கு வெளியேயும்
கடவுள்களாக

**சீ. பாஸ்கர் <baskee1981@gmail.com>**

# இலங்கை அரசியலை பின்-நவீனத்துவ நிலவரத்தினூடாகப் புரிந்துகொள்ளல்

**இளங்கோ**

இலங்கையின் பொருளாதாரம் வங்குரோத்து நிலைக்குச் சென்றபோது, சில வருடங்களுக்கு முன், 'அரகலய' போராட்டம் மக்களால் முன்னெடுக்கப் பட்டது. அதன் உச்சத்தில் அன்றைய ராஜபக்ஷ அரசு துடைத்தெறியப்பட்டது. இலங்கையின் முழு அதிகாரங்களும் பெற்ற ஜனாதிபதியான கோத்தபாய ராஜபக்ஷஇலங்கையை விட்டுத் தப்பியோடியதும் வெவ்வேறு நாடுகளில் தலைமறைவாகப் பதுங்கி இருந்ததும் அண்மைக்கால இலங்கையின் வரலாறு.

நாட்டைத் திவாலாக்கி இப்படி அரசுகள் வீழ்ந்தற்கு - ஒரு பத்து வருடங்களுக்கு முன்னால் போனால் - நமக்கு 'அரபு வசந்தம்' சிறந்த சாட்சியமாக இருக்கின்றது. விலைவாசிகள் உயர்ந்து மக்களின் நாளாந்த வாழ்வே அவதிக்குட்பட்டபோது ஒரு துனிஷியா இளைஞன் சந்தையொன்றில் தன்னைத் தீவைத்துக்கொழுத்தியதன் மூலம் 'அரபு வசந்தத்தைத் துனிஷியாவில் தொடக்கி வைத்தான். அந்தக் கோபத் தீ பின்னர் எகிப்து, லிபியா, பஹ்ரைன், யேமன், சிரியா என பல நாடுகளைச் சென்றடைந்தது. சில நாடுகளில் மனித இழப்புக்களோடு அந்தந்த நாட்டு ஜனாதிபதிகள் தூக்கியெறியவோ அல்லது அரச அதிகாரத்தை இராணுவத்திடம் கொடுத்துவிட்டுத் தப்பியோடவோ வேண்டியிருந்தது. இந்த 'அரபு வசந்தத்தில்' மேற்குலகின் இரகசியக் கைகள் போராட்டத்தின் இறுதிக்காலங்களில் இருந்தனவா என்பதும் முக்கியமான கேள்விதான்.

ஆனால்,இலங்கையில் நடந்த 'அரகலய' போராட்டம் பல்வேறு வகைகளில் சிறப்பு வாய்ந்தது. எவ்வித மனித இழப்புக்களும் இல்லாமல் ஒரு சர்வாதிகார - அதுவும் ஈழத்தில் போரை முடித்து இன்னொரு பேரரசனாக தம்மை புதிய 'மகாவம்ச'த்தின் பக்கங்களில் சேர்த்துக்கொண்ட ராஜபக்ஷ குடும்பம் முழுதாக மக்களினால் துடைத்தெறியப்பட்டது. இவ்வாறு மக்களால் துரத்தியடிக்கப்பட்ட இந்த முக்கிய சம்பவத்தை ராஜபக்ஷ குடும்பமோ இனி வரும் சிங்கள அரசாட்சியாளர்களோ மகாவம்சத்தில் சேர்ப்பார்களா என்றும் பார்க்க வேண்டும்.



மேலும் 'அரகலய' போராட்டம் நடந்தபோது இராணுவம் எவ்வாறு பேரமைதியாக இருந்தது என்பது மிகப்பெரும் கேள்வி (அமெரிக்காவின் தலையீடுநிச்சயம்இருந்திருக்கும்).பிறதென்கிழக்காசிய நாடுகளான பாகிஸ்தான், பங்களாதேசம் போன்ற நாடுகளைப் போல, அங்கு மக்களால் துரத்தப்பட்ட ஜனாதிபதி / பிரதமர்களுக்குப் பின், இராணுவம் இலங்கையில் தனக்கான அதிகாரத்தையும் எடுத்துக்கொள்ளாது,'ஜனநாயக வழியிலே' அதிகாரம் கைமாற்றப்பட்டதையும் முக்கிய புள்ளியாக நாம் குறித்தாக வேண்டும்.

இத்தனைக்கும் இலங்கையில் இராணுவத்தின் அளவு மிகப்பெரியது. ஒரு நாட்டின் சனத்தொகையை வைத்துப் பார்க்கும்போது, இலங்கையானது உலகில் 14வது பெரிய இராணுவத்தை தன்னகத்தே கொண்டிருக்கின்றது. அத்தகைய பலமிகு இராணுவத்துக்கு, சர்வ அதிகாரமும் வாய்க்கப் பெற்ற ஜனாதிபதி கட்டளையிட்டிருந்தால் 'அரகலய' போராட்டக்காரர்கள் அனைவரையும் ஒரு நாளுக்குள் அகற்றிவிட முடியாதா என்ன? ஆகவே இந்த விடயத்தில் உள்ளே நடந்திருக்கக்கூடிய இந்திய / அமெரிக்க / ஐரோப்பா அரசுக்களின் இராஜதந்திர நாடகத்தை இப்போது கொஞ்சம் மறந்துவிடுவோம்.



சமகாலத்துக்கு வருவோம். 'அரகலய' போராட்டத்தின் ராஜபக்ஷ குடும்பம் துரத்தப்பட்ட- பின், நிலைமாறும் அரசை ரணில் விக்கிரமசிங்க தாங்கிக்கொள்கிறார். நேரடித்தேர்தல்களில் பலமுறை தோற்று ஒருபோதும் ஜனாதிபதி பதவி ரணிலுக்குக் கிடைக்காதென, ரணிலே அந்த ஆசையைக் கைவிட்டபோது அவருக்கு இப்படி அமைந்தது ஒரு பேராச்சிரியமே. இதையும் ஒருவகையில் பின் நவீனத்துவ 'விளையாட்டு' என எடுத்துக் கொள்ளலாம்.

இந்த அவல் / அபத்த நகைச்சுவையை ஒருபக்கம் வைத்துவிட்டுப் பார்த்தால், 'அரகலய' போராட்டம் / அதற்காய்ப் போராடிய மக்கள் / துரத்தியடிக்கப்பட்ட ஜனாதிபதி என எல்லாவற்றையும் பின் நவீனத்துவத்தின் மூலம் அணுகினால் இன்னும் சுவாரசியமான பல முடிச்சுக்கள் கட்டவிழலாம்.

பின் நவீனத்துவம் மார்க்ஸியம் உள்ளிட்ட பலவற்றைப் பெருங்கதையாடல் என்று கூறி நிராகரிக்கின்றது. ஏன் மார்க்ஸியம் போன்றவை பெருங்கதையாடல் என்று பின்நவீனத்துவம் சொல்கின்றது என்றால், மரபான மார்க்ஸியர் உள்ளிட்ட பலர் 'மார்க்ஸியமே' முடிந்த முடிவானது; அதை மாற்றமுடியாது என்று வலியுறுத்திய காலம் ஒன்றிருந்தது, எல்லோருக்குமான முழு உண்மை என்பதை பின் நவீனத்துவம் ஏற்றுக்கொள்வதில்லை. எல்லாமே பகுதி பகுதி உண்மைகளாலானது என்பதே பின் நவீனத்துவம் வலிறுத்துகின்றது. ஆகவே மார்க்ஸியம் தன்னை முடிந்த உண்மையாகவும் முழுமையடைந்த தத்துவமாகவும் முன்வைக்கும்போது அது பெருங்கதையாடல் ஆகிவிட்டது என்றே அர்த்தம். அங்கே எந்த மாற்றங்களை ஏற்படுத்த முடியாது ஒரு 'தேக்கநிலை' உருவாகிவிடுகின்றது.

மதம் சார்ந்த பிரதிகளையும் இப்படிப் பார்க்கலாம். எல்லாமே ஏற்கனவே எழுதப்பட்டு விட்டன / சொல்லப்பட்டுவிட்டன என்ற அடிப்படைவாத மதவாதிகள் உரத்தக் குரலெழுப்புவார்கள் அல்லவா? அவ்வாறு பெருங்கதையாடலாகி விட்டவை என்ன செய்யும்; தனக்குள் அதிகாரத்தைக் குவிக்கும். அப்படிக் குவிப்பதன் மூலம் எல்லோருக்கும் பொதுவான உண்மையான அந்தப் பிரதிகளை முன்வைக்கும். அவ்வாறு அதற்குள் அடங்காதவர்களை 'மற்றமை'யாகக் கட்டியமைத்து தனது எதிர்ப்பினைக் காட்டும்.

உதாரணத்துக்கு இலங்கையில் சிங்களப் பேரின வாதம், சிங்களப் பௌத்தமே அரச அதிகார மதம் என்று சொல்வதன் மூலம் ஒருவகை அதிகாரத்தை பௌத்தத்துக்குக் கொடுப்பதைச் சொல்லிக் கொள்ளலாம். அதன் இன்னொரு முனைதான், இப்போது மீண்டும் வென்றுள்ள டிரம்ப், பைபிளை மீண்டும் அமெரிக்காவின் மீட்டெடுத்த வெள்ளையினப் பெருமிதமாக முன்வைப்பதாகும்.

நான் மீண்டும் இலங்கை அரசின் பின் நவீனத்துவ நிலவரத்துக்கு வருகின்றேன்.

பின் நவீனத்துவம், பெருங்கதையாடலை நிராகரிக்கும், அதேவேளை, இனிப் பெரும் புரட்சிகளால் மாற்றங்கள் நிகழாது என்பதையும் விலத்தி வைக்கவே செய்கின்றது. ஏனெனில், இந்த குவிப்பு (unity) என்பது எப்படியோ பெரும் அதிகாரத்தை

(totality) கொண்டுவருகின்றது என்று சந்தேகப்படச் சொல்கின்றது. சிறு குழுக்களால், அதிகாரத்தில் மாற்றங்களை, ஏதேனும் ஒரு வகையில் மேற்குலகில் கொண்டுவந்தற்கு கறுப்பினத்தவர்களில் 'Black Lives Matter', கனடாவில் பூர்வீகக்குடிகளின் 'Idle No More' போன்றவற்றை அவ்வப்போது உதாரணங்களாகச் சொல்வதுண்டு.

இடதுசாரி ஆயுதப் புரட்சிகளை இரண்டு வெவ்வேறு காலங்களில் நிகழ்த்திய ஜேவிபியின் பின்னணியில் இருந்து வருகின்ற, இலங்கையின் தற்போதைய ஜனாதிபதி அநுர குமார திஸ்ஸநாயக்க ஒரு இடதுசாரியா என ஒரு நேர்காணலில் பாக்கியசோதி சரவணமுத்துவிடம் கேட்கும்போது Anura is a pragmatist, not a Marxist என்று சொல்கிறார். அதாவது அநுர யதார்த்தவாதியே தவிர இடதுசாரி கொள்கைகளைக் கடைப்பிடிக்கக் கூடிய ஒருவர் அல்ல என்கின்றார் (இல்லாவிட்டால் எந்த அசலான இடதுசாரி IMFஉடன் கடன்வாங்கும் பேச்சுக்களைத் தொடர்ந்து நடத்த முடியும்?)

மேலும் அநுரவின் என்பிபி கூட்டணி, இடதுசாரி அரசியலை முன்வைத்து மக்களிடம் வாக்குக் கேட்டவர்களும் அல்ல. அவர்களின் முக்கியமான தேர்தல் விஞ்ஞாபனமாக இருந்தது இலஞ்ச ஒழிப்பு (Anti-Corruption). இத்துடன் இலங்கை வீழ்ச்சியில் இருந்து எழுவதற்குப் பொருளாதாரச் சீர்திருத்தமும் முக்கியமானது என்பதை மேலதிகமாகத் தம் தேர்தல் பரப்புரைகளில் சேர்த்துக் கொண்டனர். ஆனால், அந்தப் பொருளாதாரச் சீர்திருத்தம் மார்க்ஸின் பொருளாதாரத்தின் அடிப்படையில் வரப்போவதில்லை என்பதையும் நாமறிவோம். வேண்டுமெனில் என்பிபியினர் கொண்டு வரும் சீர்திருத்தம் நியோ-லிபரல்களுக்குரிய ஒன்றாக இருக்கக்கூடும் என நம்பலாம். இல்லாவிட்டால் இன்றிருக்கும் இலங்கையை என்றென்றைக்குமாகக் கட்டியெழுப்பவும் முடியாது என்பதே இலங்கையின் துயர யதார்த்தமாகவும் இருக்கின்றது.

இந்தப் பின்னணியில்தான் - அதாவது இலஞ்ச ஒழிப்பும், பொருளாதாரச் சீர்திருத்தமும் முக்கியப்படுத்தப்பட்டதால்தான் சிறுபான்மையினரான தமிழர்களும் முஸ்லிம்களும் மலையகத் தமிழர்களும் என்பிபி கூட்டணிக்கு பெருவாரியாக வாக்களித்திருந்தனர். இலங்கை சுதந்திரமடைந்ததிலிருந்து சிங்கள மக்கள் தேர்ந்தெடுக்கும் எந்த ஜனாதிபதிக்கோ / சிங்களக் கட்சிக்கோ எதிரான நிலையில்தான் தமது ஆதரவை வழங்கிய வடக்கு கிழக்கு (மட்டக்களப்பு தவிர்த்து) மக்கள், இம்முறை பெருமளவில் வாக்களித்தது இலங்கையின் வரலாற்றிலே முக்கியமானது.

'இலஞ்ச ஒழிப்பு' என்பது இத்தேர்தலில் முக்கியப்படுத்தப் பட்டதால்தான், அதற்கு முன்னர் யாழில் சில அரசாங்க வைத்தியசாலைகளில் நடக்கும் மருத்துவச்சீர்கேடுகளைப் பொதுவெளியில் கொண்டு வந்த வைத்தியரான அருச்சுனாவும் வடமாகாணத்தில் சுயேட்சையாக நின்று வென்றிருக்கின்றார் என்று நம்புகின்றேன். இங்கே ஒருசாரார் அருச்சுனாவை கண்மூடி ஆதரிப்பதற்கும் இன்னொரு பகுதியினர் அவரை எல்லாவற்றுக்கும் நக்கலடிப்பதற்கும் அப்பால் அருச்சுனாவின் வருகையை / வெற்றியை வைத்து ஒரு case study செய்து பார்க்கலாம்.

எப்படி 'அரகலய' போராட்டத்தோடு ஜேவிபியினர் இளையவர்களை சமூக வலைத்தளங் களினூடாக அணுகி ஆதரவு பெற்றனரோ (மிகுதி அனைத்து மரபார்ந்த சிங்கள அரசியல் கட்சிகள் சமூக வலைத்தளங்களின் தாக்கத்தை கவனிக்கத் தவறியமை) அவ்வாறே சமூகவலைத்தளங்களைப் பயன்படுத்தி அருச்சுனாவும் வெற்றிபெற்றிருக்கின்றார். இத்தனைக்கும் அவரின் சறுக்கல்கள், அவரின் சுயேட்சிக் குழுக்கள் நடந்த எதிர்ப்புக்கள் எனப் பல விடயங்கள் தேர்தல் காலங்களில் தொடர்ந்த போதும், மரபார்ந்த தமிழ்க் கட்சிகளின் பல முக்கியமானவர்களை மண் கவ்வச் செய்து அருச்சுனா வென்றிருப்பது என்பது அவ்வளவு எளிதல்ல.

சுமந்திரன் போன்ற இலங்கைத் தமிழ் அரசுக் கட்சியின் முக்கியமான நபரை மட்டுமில்லை, எப்போதும் நிலையான வாக்குவங்கியை வைத்திருப் பவர் என்று கடந்த பல தசாப்தங்களாக நிரூபித்த டக்ளஸ் தேவானந்தாவைக் கூட தோற்கடித்து, அதுவும் இலங்கையில் பல நூற்றுக்கணக்கான சுயேட்சைக் குழுக்கள் நின்ற இத்தேர்தலில், ஒரேயொரு சுயேட்சைகுழு எம்பியாக பாராளுமன்றத்துக்கு அருச்சுனா சென்றிருக்கின்றார். இத்தனைக்கும் யாழின் முன்னாள் மேயராகவும் நிதானமாக அரசியல் செய்பவராகவும் பெரும்பாலான யாழ்ப்பாணர்கள் விரும்புவதாகச் சொல்லும் தமிழ்த்தேசியத்தின் மீது அபரித விருப்புமுள்ள மணிவண்ணனைக் கூட எளிதில் அருச்சுனா தோற்கடித்திருப்பதை பின் நவீனத்துவ நிலவரத்தின் நல்லதொரு உதாரணமாகக் காட்டலாம்.

இன்னொரு வகையில் இது எனக்கு சிலியில் நடந்த ஒரு விடயத்தை நினைவூட்டுகின்றது. பினோச்சோயின் சர்வாதிகாரத்திற்குள் நெடுங்காலமாகச் சிக்கித் திணறிய மக்களுக்கு அதிலிருந்து தப்புவதற்கு ஒரு ஜனநாயக ரீதியாக சூழல் வருகின்றது. அதாவது 'இல்லை' (No) என்று பெரும்பான்மை வாக்களித்தால் பினோச்சோ ஜனாதிபதி பதவியிலிருந்து விலகிப் போகவேண்டும். அந்தத் தேர்தலில் பினோச்சோவைத் தோற்கடிக்க அங்கிருக்கும் இடதுசாரிகள் கடுமையாக உழைக்கின்றனர். ஆனால், எப்படி எதைச் செய்தாலும் என்ன புதிதாக நடந்துவிடப் போகின்றது என்ற அலுப்பில், இளம் வாக்காளர்கள் வாக்களிக்கவே விரும்பாமல் இருக்கின்றனர். அப்போதுதான் ஒரு இடதுசாரிக் குழு, இந்த இல்லை'(No)க்கு வாக்களித்தால் நாட்டில் பாலும் தேனுமாக cocacolaவும் பார்ட்டிகளும்



விக்ரமசிங்க



சஜித் பிரேமதாசா



அநுரா குமார திசநாயக்க



சமல் ராஜபக்ஷ

அமெரிக்கக் கனவுமாக மாறப்போகின்றதென்று விளம்பரங்கள் செய்து இளைஞர்களின் மனதை மாற்றியமைக்கின்றார்கள் (இதன் வரலாற்றை 'NO' என்கின்ற திரைப்படத்தைப் பார்ப்பதன் மூலம் நன்கு அறிந்து கொள்ளலாம்). இறுதியில் இந்தத் தேர்தலில் பினோச்சோ தோல்வியடைந்து சிலியிருந்து ஐரோப்பா நாடொன்றுக்குத் தப்பியோடுகின்றார்.

அவ்வாறுதான் நாட்டில் எல்லாமே இலஞ் சத்தில் திளைத்திருக்க, ஒரு தன்னிலை அதன் அத்தனை பலவீனங்களோடும் எதிர்க்கேள்விகளும் அம்பலப்படுத்தல்களையும் செய்ய, வட மாகாணத்தில் அருச்சுனா ஒரு வெற்றித் திருவுருவாக்கப் பட்டிருக்கின்றார். இந்த வெற்றியை நாம் சும்மா போகின்றபோக்கில் எள்ளல் செய்து கடந்துவிடாமல் இருந்தால் நிறையப் பாடங்களைக் கற்றுக் கொள்ளலாம். அடுத்த தேர்தலில் அருச்சுனா இதைமாதிரி வெல்வாரா இல்லையா அல்லது ஏதேனும் மரபான கட்சியில் ஐக்கியமாவாரா என்பது எதிர்காலத்துக்குரியவை. இப்போது அவசியமும் அற்றது.

எனக்குப் பிடித்த தத்துவவாதியான தெரிதா, 'எதிர்காலம் என்பதே நாம் நினைத்துக் கொண்டிருக்கும் எதிர்காலம் அல்ல' என்கிறார்.. எதிர்காலம் கணிக்கக் கூடியதும் திட்டமிடப் படக்கூடியதும் அட்டவணைப்படுத்தக் கூடியதும்... ஓரளவு எதிர்வுகொள்ளக்கூடியதும் என்பதைத் தெரிதா மறுக்கின்றார். இது எதிர்காலம் என்றாலும் எதிர்காலம் என்று நமக்குத் தெரிந்த எதிர்காலத்தைத் தாண்டிய எதிர்காலமே (future beyond this known future), தான் குறிப்பிடுகின்ற 'எதிர்காலம்' என்கின்றார் ('மற்றதுகளின் வருகைக்காய் காத்திருத்தல்'). அதாவது முற்றுமுழுதாக எதிர்பாராத ஒரு வருகைக்காக காத்திருப்பதைப் போன்றதே தான் குறிப்பிடும் எதிர்காலம் என்கின்றார் தெரிதா.

அவ்வாறான ஒரு 'எதிர்காலம்' தான் இலங்கையில் இப்போது சாத்தியமாகின்றது என்று நினைக்கின்றேன். இல்லாவிட்டால் கடந்த தேர்தலில் 225 இருக்கைகள் உள்ள பாராளுமன்றத்தில் 3 இருக்கைகள் மட்டுமே வென்ற ஜேவிபி, இம்முறை கிட்டத்தட்ட 160 இருக்கைகளை வென்று இலங்கையின் தேர்தல் வரலாற்றில் நிகழாத அறுதிப் பெரும்பான்மைச் சாதனையை நாட்டியிருப்பதும் கடந்த ஜனாதிபதி தேர்தலில் 3% வாக்குகளைப் பெற்ற ஒருவர் இம்முறை 42% வாக்குகளைப் பெற்று நிறைவேற்று அதிகாரமுள்ள ஜனாதிபதியாக இலங்கையில் வந்திருப்பதையும் யார்தான் கணித்திருக்க முடியும்?

ஆக, 'அரகலய'ப் போராட்டத்தில் இருந்து, இன்று அனுர குமார திஸ்ஸநாயக்க ஜனாதிபதியாக வென்றிருப்பதிலிருந்து, அருச்சுனா ஒரு சுயேட்சை வேட்பாளராக எம்பி ஆனது வரை எல்லாவற்றையும் பின் நவீனத்துவ நிலவரத்துக்குள் வைத்து விளங்கிக் கொள்ளப் பார்ப்பது சுவாரசியந் தரக்கூடியது. ஆனால், irony என்னவென்றால் நாம் ஒன்று உறைந்துபோன தமிழ் அரசியல் ஆய்வாளர்களின் அரைத்த மாக்கதைகளில் சிக்குண்டு கிடப்போம், இல்லாவிட்டால் இன்றைய யூ-டியூப்பர்களின் கட்டுக்கதைகளில் 'சில்லறையைச் சிதற' விட்டுக் கொண்டிருப்போம். ஒருபோதும் வெவ்வேறு சிந்தனைப் புள்ளிகளில் வைத்து இலங்கை அரசியலை விளங்கிக் கொள்வது பற்றிக் கிஞ்சித்தும் அக்கறை கொள்ளமாட்டோம்.

இளங்கோ <elanko@rogers.com>

# கல்குதிரையின்
# ஃபியோதர் தஸ்தயேவ்ஸ்கி சிறப்பிதழ்

செ. சண்முகசுந்தரம்

தஸ்தயேவ்ஸ்கி குறித்தும் அவருடைய படைப்புகள் குறித்தும் வாசிக்கும் போதெல்லாம் நம் மனம் எழுச்சி கொள்ளாமல் இருந்ததில்லை. தீவிர வாசிப்புக்குச் சொந்தக்காரர்கள் எல்லோரும் அவருடைய ஏதோ ஒரு படைப்பை வாசித்திருப்பார்கள். கடந்த 150 ஆண்டுகளில் தஸ்தயேவ்ஸ்கியின் படைப்புகள் இந்த உலகை மெஸ்மரிசம் செய்திருக்கிறது என்று துணிந்து சொல்லலாம். அவருடைய இறுதிப் படைப்பான 'கரமசோவ் சகோதரர்கள்' இதுவரை இவ்வுலகில் படைக்கப்பட்ட படைப்புகளுள் உச்சக்கட்டமானது. அதற்கான ஒரே சாட்சி டால்ஸ்டாய். தன் இறுதிக்காலத்தில் அவர் தன்னோடு வைத்துக் கொண்டிருந்த ஒரே நூல் 'பைபிள்' அல்ல,'கரமசோவ் சகோதரர்கள்' தான்.

உள்மன விசாரணையை இறக்கும்வரையிலும் நாம் செய்துகொண்டே இருக்கவேண்டும் என்பதற்கு ஒரே உதாரணம் டால்ஸ்டாய். அதனால்தான், அவர் தான் இறக்கும் தருவாயிலும் 'கரமசோவ் சகோதரர்கள்' கூடவே வாழ்ந்தார்.

தமிழ்ச்சூழலில் தஸ்தயேவ்ஸ்கி தீவிர வாசகர்களால் விரிவான வாசிப்புக்கு உள்ளாக்கப்பட்டிருக்கிறார். நன்கு உள்வாங்கப்பட்டிருக்கிறார். 'தஸ்தயேவ்ஸ்கி சிறப்பிதழ்' ஒன்றை கோணங்கியின் 'கல்குதிரை' இதழ் 'தாஸ்தாயெவ்ஸ்கி - ஒரு தொகுப்பு' எனும் தலைப்பில் 1991, மே மாதம் வெளியிட்டது. சுந்தர ராமசாமி, எஸ்.வி. ராஜதுரை, ந. முத்துமோகன், சா. தேவதாஸ், கோபி கிருஷ்ணன், தேவதச்சன், சி. மோகன், கோமதி விநாயகம், குறிஞ்சிவேலன், நகுலன், பிரமிள் உள்ளிட்ட முக்கிய ஆளுமைகள் இச்சிறப்பிதழில் பங்களித்துள்ளார்கள். தஸ்தயேவ்ஸ்கியின் ஆளுமை மிக விரிவாகவே இவ்விதழில் அலசப்பட்டிருக்கிறது.

இவ்வுலகில், 'துன்பத்தை ஏற்று வாழ்வதே மறுமையில் நம்மை உய்வித்துக் கொள்ள ஒரே வழி' என்னும் கிறித்துவத்தின் இறையியலை ஒட்டியே தன் வாழ்க்கையை வாழ்ந்தவர் தஸ்தயேவ்ஸ்கி. அன்றைய ஜார் ஆட்சி மீதான வெறுப்பின் விளைவாக இளம் வயதில் புரட்சிக் கருத்துகளால் ஈர்க்கப்பட்டு, அரசினால் தண்டிக்கப்பட்டார். முதலில் மரண தண்டனை விதிக்கப்பட்டு பின்னர் சைபீரியாவில் நான்கு ஆண்டுகள் கடும் சிறைத்தண்டனை அனுபவிக்கும் விதமாக அது மாற்றப்பட்டது. சிறை வாழ்க்கையிலும் அதன் பிறகும் தன்னுடைய முந்தைய புரட்சி எண்ணங்களிலிருந்து விடுபட்டு, கிறித்துவ இறையியலை முழுவதுமாகக் கைகொள்ள ஆரம்பிக்கிறார். அவர் கூடவே பைபிளும் இருக்கிறது. தஸ்தயேவ்ஸ்கி வாழ்வின் துன்ப துயரங்களின் அடிமுடிக்குச் சென்று பின் மீண்டெழுகிறார். சிறை வாழ்வுக்குப் பிறகு, ருஷ்யாவின் தேசியத் தன்மைக்கு தன்னை முழுமையாக ஒப்புவித்துக் கொண்டார்.

தஸ்தயேவ்ஸ்கியைக் குறித்துப் பேசும்போதெல்லாம், படிக்கும்போதெல்லாம் தந்தைகளின் நினைவுகள் யாருக்கும் வராமல் இருந்ததில்லை. தஸ்தயேவ்ஸ்கி என்னும் ஆளுமையை வடிவமைத்ததில் அவருடைய தந்தையின் பங்கு அளப்பரியது. நேர்மறையான பங்கு அல்ல, எதிர்மறையானது. 'கொல்லப்பட வேண்டிய தந்தைகள் ஏராளமாக இருக்கிறார்கள்' என்னும் வாக்கியத்தை 'கரமசோவ் சகோதரர்கள்' நாவலில் வாசித்த நினைவிருக்கிறது. தந்தையின் மூலம் அவர் குடும்பம் அடைந்த துன்பமும் துயரமும்தான் தஸ்தயேவ்ஸ்கியின் அடிமன ஆழத்தில் போடப்பட்ட பெரும் சவுக்கடி. தாயின் நடத்தை மீது சதா சந்தேகம் கொண்டு அவரை சித்திரவதை செய்துகொண்டே இருந்தார் தஸ்தயேவ்ஸ்கியின் தந்தை. ஏழு குழந்தைகளுக்குத் தாயான பின்னரும்கூட அவரின் சந்தேகச் சித்திரவதை ஓயவில்லை. தன்னுடைய தாய் மரணமடைந்து இரு வருடங்களில் தந்தையும் படுகொலை செய்யப்பட்டவுடன் தன்னுடைய தங்கைகளின், தம்பிகளின் எதிர்கால வாழ்க்கையை நினைத்து ஏங்கியபோது அவருடைய ஆழ்மனம் பாதிக்கப்பட்டு உடன் வலிப்பு நோய் வருகிறது. தந்தையின் மரணம் குறித்து அவர் எங்கும் பேசியதோ அல்லது எழுதியதோ கிடையாது. தந்தையின்





இல்லாமையை உணர்ந்த நேரத்தில் அவரது உடலை நோய் தாக்குகிறது. இதுவரை தந்தையின் மீது இருந்துவந்த கோபம் மறைந்துபோய் விடுகிறது. தந்தையின் படுகொலைக்கு தானும் (தன் தந்தையை வெறுத்ததன் மூலம்) ஒரு காரணமாகிவிட்டோமோ என்று மனத்துன்பம் அடைகிறார்.

'அறியப்படாத தஸ்தயேவ்ஸ்கி' என்னும் தலைப்பில் அறிஞர் ந. முத்துமோகன் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். தஸ்தயேவ்ஸ்கி குறித்த ஒரு சிறப்பான அறிமுகமாக இக்கட்டுரை அமைந்திருக்கிறது. தஸ்தயேவ்ஸ்கியின் தாய் படும் வேதனையை அத்தாயின் வார்த்தைகளால் எடுத்துரைக்கிறார்: "இப்போது நான் வயிற்றில் ஏந்தியிருப்பது ஏழாவது முறையாக நம் இருவரின் நேசத்தில் விளைந்தது. சத்தியம் செய்கிறேன். திருமண நாளிலிருந்து நான் உங்கள் மீது கொண்ட பரிசுத்தமான, புனிதமான, உணர்ச்சி மயமான, நிலைத்த, குறைபாடில்லாத காதலில் விளைந்தது அது". அத்தாயின் எப்படிப்பட்ட மன்றாடுதல்களும் கேட்பாரற்றுப் போய்விடுகிறது. இறுதியாக தஸ்தயேவ்ஸ்கியின் தாய் 1837 ஆம் ஆண்டு பிப்ரவரி 27இல் இறந்துபோகிறார். தஸ்தயேவ்ஸ்கியின் தந்தையும் அடுத்த இரு வருடங்களில், 1839 ஜூன் 8 அன்று கொலை செய்யப்படுகிறார்.

தஸ்தயேவ்ஸ்கி தன் முதல் நாவலான 'பாவப்பட்ட ஜனங்கள்' மூலமாக ரஷ்ய இலக்கிய உலகில் ஒரு முக்கிய இடத்தைப் பிடித்து, பின், எழுத்தாளர் துர்கனேவின் எதிர்மறையான விமர்சனங்களால் மனமுடைகிறார். தன்னை குறுக்கிக் கொள்கிறார். அத்துடன் தஸ்தயேவ்ஸ்கியின் முதலாம் கட்ட இலக்கிய வாழ்வும் முற்றுப்பெறுகிறது.

கல்குதிரை ஃபியோதர் தஸ்தயேவ்ஸ்கி சிறப்பிதழில் 'காலத்தின் குழந்தை' என்னும் தலைப்பில் எழுத்தாளர் சா. தேவதாஸ் எழுதியுள்ள கட்டுரை மிக முக்கியமானதாக நான் பார்க்கிறேன். இன்றைய தமிழ் இலக்கியச் சூழலில் தஸ்தயேவ்ஸ்கியைப் பேசவேண்டியதன், வாசிக்க வேண்டியதன் அவசியம் என்ன என்பதில் ஆரம்பிக்கும் கட்டுரை, தஸ்தயேவ்ஸ்கியை எதிர்மறையாக விமர்சனம் செய்திட்ட மாக்சிம் கார்க்கியை கடுமையாக எதிர் விமர்சனம் செய்வதோடு முடிகிறது. தஸ்தயேவ்ஸ்கி என்னும் கலைஞனின் பணி மகத்தானது என விளக்கும் சா. தேவதாஸ், 'ஒரு மனிதன் ஒரு நேரத்தில் நல்லவனும் ஆவான், பிறிதொரு நேரத்தில் கெட்டவனும் ஆவான். அவனுடைய ஒரு தன்மையைக் கொண்டு மட்டும் அவனின் குணாம்சத்தை நிறுவ முயல்வது அபத்தமானது' என தஸ்தயேவ்ஸ்கியின் படைப்புகள் வழி சொல்கிறார்.

'கரமசோவ் சகோதரர்கள்' படைப்பில்,

கரமசோவ் சகோதரர்களின் தந்தை கொலையுறுவதும் மூத்த சகோதரர் திமித்ரி அக்கொலையைச் செய்யாவிட்டாலும் சந்தர்ப்ப சாட்சியங்கள் மூலம் அக்கொலைக்கான பழி திமித்ரி மீது விழுவதும் நீதிமன்றம் திமித்ரிக்கு தண்டனை வழங்குவதும் நாம் அறிந்ததுதான். தஸ்தயேவ்ஸ்கி சொல்லவரும் மையச்சரடு என்ன தெரியுமா? ஒரு கொலையை ஒருவன் செய்திருந்தபோதிலும், அதற்கு முழுப்பொறுப்பும் அந்தச் சமுதாயமே ஏற்கவேண்டும் என்பதே. ஒரு கொலைக்கான தோற்றுவாய் என்பது அந்தச் சமூகத்தில்தான் வேரூன்றி இருக்கிறது. கொலையைச் செய்தவன் ஸ்மெட்ரியாகோவ்தான். ஆனாலும் தந்தையைக் கொல்ல திட்டம் தீட்டியவன் மூத்த சகோதரன் திமித்ரி என்பதாலும், கொலைக்கான திட்டங்கள் வகுத்துக் கொடுத்தவன் என்னும் முறையில் அடுத்த சகோதரன் இவானும் கொலைக்கான மௌன சாட்சியாக இருக்கும் இளைய சகோதரன் அல்யூஷாவும் இக்கொலைக்கு காரணகர்த்தாக்களாகவே தஸ்தயேவ்ஸ்கி காட்டுகிறார். எல்லோருக்கும் நீதிமன்றம் சரிசமமான தண்டனை வழங்குகிறதா என்ன?

நம்பிக்கை - நம்பிக்கையின்மை என்னும் இருமை நிலையை தஸ்தயேவ்ஸ்கி கொண்டிருந்ததை சா. தேவதாஸ் குறிப்பிடுகிறார். எல்லாம்வல்ல இறைமை (இயேசு கிறித்து) மீது முழுமையாக நம்பிக்கை கொண்டிருந்த தஸ்தயேவ்ஸ்கி, சமூகத்தில் நடக்கும் சில கொடும் செயல்களைக் கண்ணுற்ற பிறகு, இறைமையின் இருப்பையும் கேள்விக்குட்படுத்துகிறார். யதார்த்தத்தின் அனைத்து அம்சங்களையும் மிகத் தீவிரத்தோடு வெளிப்படுத்துவதே தஸ்தயேவ்ஸ்கியின் சிறப்பம்சம். எதையும் மதிப்பீடு செய்வது எழுத்தாளனின் வேலையல்ல. தஸ்தயேவ்ஸ்கி முற்றும் முழுதாக இதற்குப் பொருந்திப் போகிறார். கார்க்கி, தஸ்தயேவ்ஸ்கியை விமர்சனம் செய்ததற்கும் தேவதாஸ் பதில் தருகிறார்:

'கார்க்கி, தாஸ்தாயெவ்ஸ்கியை விமர்சிக்கும்போது இப்பிரச்சனை தான் எழுகின்றது. இருண்ட பக்கங்களை எடுத்துரைத்த தாஸ்தாயெவ்ஸ்கி மனித எழுச்சிக்காக ஒன்றும் கூறவில்லை என்பதுதான் கார்க்கியின் வருத்தம். படைப்பாளியாகவும் இருந்த கார்க்கி சோசலிச யதார்த்த வாதத்தை தூக்கிப்பிடித்த காலத்தில் இப்படி எழுத முடிந்தது எத்தகைய முரண்பாடு! வாழ்வின் ஆதர்ச விஷயங்களையும் உற்சாகமும் ஊட்டக்கூடியவற்றையும் மனிதனுக்குக் கூறுவது கலைஞனின் பணியில்லையா? மனிதனிடம் நேசம் கொண்டு, அவனது அவலத்தைக் கண்டு புழுங்கி பொறுக்கமாட்டாமல் தானே எழுதத் தொடங்குகிறான். பிரச்சனையை அதன் வீர்யம் குன்றாத வகையில் உணர்த்திவிட்டாலே போதும். அது விளைவைத் தொடங்கி வைத்துவிடும். பிரச்சனையைத் தீர்க்க என்ன செய்யவேண்டும், எப்படிச்செயல்படவேண்டும்-என்பவற்றையெல்லாம் மக்கள் தாங்களே வகுத்துக் கொள்வர். மேலும், தீர்வு என்பது காலதேசவர்த்தமானங்களுக்கு ஏற்ப அப்போதைக்கப்போது தீர்மானிக்கப்பட வேண்டிய விஷயம். அதனை முன்கூட்டியே கூறுவது சரி யில்லாதது. இதனைக் கலையின்பால் சுமத்தி கலையின் ஜீவனை நசுக்கி விடுவது அழகல்ல. அரசியல்வாதியின் பணியை கலைஞனிடம் சுமத்தக் கூடாது. கலைஞன் செயல்வீரனாகவும் பொங்கி எழலாம். அது அவனது அடுத்தகட்டப் பணியே தவிர கலைஞனாக நின்று கலைக்குள் ஆற்றும் பணியல்ல. ஒவ்வொரு சாதனம், ஒவ்வொரு வடிவம் - இவற்றின் வரம்பு களை உணர்ந்து அதற்கேற்ப செயல்பட்டாமேல அதனதன் வெற்றி சாத்தியம்.

நூற்றாண்டுகளாகருஷ்ய ஆன்மாபட்டபாடுகளை, சித்திரவதைகளை வெளிப்படுத்தி நசிந்துவரும் அய்ரோப்பா முழுவதையுமே மீட்டெடுக்கும் ஆற்றல் ருஷ்ய ஆன்மாவுக்கு உண்டு என்று நம்பியவரை, 'வாழ்வின் இருண்ட அம்சங்களை வலியுறுத்தி அவநம்பிக்கைக்கும் அநுபூதி போன்றவற்றிற்கும் இட்டுச் செல்லக் கூடியவர்' என்று மதிப்பிடுவது எப்படிச் சாத்தியமாயிற்று? சக மனிதன் பாலான நேசம், தான் சார்ந்த சமூகம், பின்னர் தான் சார்ந்த நாடு, பின்னர் இப்பிரபஞ்சம் முழுமைக்குமாக விரிவு கொண்டு பிரபஞ்ச இணக்கம் காண வேண்டும் என்று கருதியவரை அவநம்பிக்கைவாதி என்று முத்திரை குத்துவது சரியாகுமா? 'இந்தப் பூமியில் வாழ்கின்ற திறமையை இழந்துவிடாமலேயே மனிதர்கள் அழகாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்க முடியும் என்பதை நான் அறிந்திருக்கிறேன். தீமையே மனிதனின் இயற்கையான நிலைமை என்பதை நான் நம்பமாட்டேன்' என்று கூறியவரை எதிர்மறை விமர்சனத்திற்குள்ளாக்குவது சரியாகுமா?

அங்கே மாதாகோவில்கள் இல்லை. ஆனால், அவர்கள் பிரபஞ்சத்தின் ஆகமொத்தத்திலும் உயிர்த் துடிப்பான, நெருக்கமான, தொடர்ச்சியான தொடர்பு வைத்திருந்தார்கள். அவர்களிடம் கோட்பாடுகள் இல்லை; ஆனால், அதற்குப் பதிலாக, இவ்வுலக வாழ்க்கையெனும் பேரின்பம் அதன் இவ்வுலகத் தன்மையின் முடிவான அளவுக்கு நிறைவு பெறும்பொழுது அவர்கள் அனைவரும் - வாழ்பவர்களும் மரணமடைந்தவர்களும் - பிரபஞ் சத்தின் ஆகமொத்தத்துடன் இன்னும் மிக நெருக்கமான தொடர்பை அடைவார்கள் என்ற அசைக்க முடியாத அறிவைக் கொண்டிருந்தார்கள். (அப்பாவியின் கனவு, ஃபியோதர் தஸ்தாயேவ்ஸ்கி சிறு கதைகளும் குறுநாவல்களும், ராதுகா பதிப்பகம், மாஸ்கோ, பக். 370) என்றவாறு பிணக்கற்ற இணக்கத்தை மானுடம் அடையவேண்டும் என்று கனவுகண்ட கலைஞனை விரல் நுனியில் ஒதுக்கிவிடுவது துரோகமாகும்.

இனங்கள் சேர்ந்துவாழ்வது முடியாதுபோய், விடுதலைக்குரல் எழுப்பும் இனத்தை நசுக்கி எறிந்துவிட



இளம் வயதில்





பெற்றோர்கள்

*கூர்நகங்கள் நீள்வதும்; சாதியின் பெயரால் சமயத்தின் பெயரால் அரசியல் சாயத்தின் பெயரால் கடவுளின் பெயரால் மனிதர்கள் வதைப்படுவதும்; சித்தாந்தங்கள் பெயரால் மனித விடுதலை ஒடுக்கப்படுவதும்; நிராசையும் தோல்வியும் கசப்புணர்வும் வாழ்க்கையின் போக்காக இருப்பதும்*

இன்றைய நிலையாகஇருக்கிறது.தாஸ்தாயெவ்ஸ்கி பற்றிப் பேச இதுதான் சந்தர்ப்பம். இதுதான் தகுந்த நேரம். அது தாஸ்தாயெவ்ஸ்கி பற்றிய புரிதலுக்கு மட்டுமல்லாது வாழ்வின் அடிநாதம் பற்றிய விளக்கத்திற்கும் வழிகோலும்' என்று முடிக்கிறார் தேவதாஸ்.

ருஷ்யாவின் தேசியக்கவி புஷ்கின் குறித்து தஸ்தயேவ்ஸ்கி ஆற்றிய உரையின் தமிழாக்கம் இப்புத்தகத்தில் இடம்பெற்றிருக்கும் மிக அருமையான படைப்பு. புஷ்கினை தேசிய நாயகனாக்கி, மாஸ்கோவில் முதல்முறையாகசிலை நிறுவி, மாபெரும் இலக்கிய நிகழ்வை 1880 ஆம் ஆண்டு ஜூன் 8 ஆம் நாள், ரஷ்ய இலக்கிய நேசர்கள் மாஸ்கோ சங்கம் ஏற்பாடு செய்திருந்தது. தஸ்தயேவ்ஸ்கி உரையாற்றுவதற்கு முதல்நாள் துர்கனேவ் உரையாற்றினார். தனது வாழ்வின் பெரும்பாலான காலத்தை ஜெர்மனியில் கழித்த துர்கனேவால், புஷ்கினை ஒரு தேசியக் கவியாக அங்கீகரிக்க முடியாமல் தடுமாற்றம் அடைந்தார்.

மறுநாள் உரையாற்றிய தஸ்தயேவ்ஸ்கி, தனது பேச்சின் தொடக்கத்திலேயே புஷ்கினை ருஷ்யாவின் தேசியக் கவியாக அங்கீகரித்தார். உலகம் தழுவிய மானுட ஒருமைப்பாட்டினை இந்த உரையில் தஸ்தயேவ்ஸ்கி பிரகடனம் செய்தார். புஷ்கின் பற்றிய இந்த உரை ஒட்டுமொத்த ருஷ்யர்களின் ஆன்மக் கிடக்கையை வெளிப்படுத்தியது. ஒட்டுமொத்த ருஷ்யர்களும் தஸ்தயேவ்ஸ்கியைக் கொண்டாடினர். தஸ்தயேவ்ஸ்கியின் உரையைக் கேட்ட மாத்திரத்தில் தஸ்தயேவ்ஸ்கியின் எதிர்த்துருவமாக இருந்த துர்கனேவ் ஓடிவந்து தஸ்தயேவ்ஸ்கியை ஆரத்தழுவிக்கொண்டார். இருபது வருட பகைமை பாராட்டிய இருவரும் நண்பர்களாயினர்.

18ஆம் நூற்றாண்டுக்கு முந்தைய ருஷ்யாவில் பிரபு குலத்தவரிடையே வெகுவாக ஆதிக்கம் செலுத்திய ஜெர்மன், பிரெஞ்சு மொழிகளை வெறுத்த ருஷ்ய மக்கள், தங்களின் ஸ்லாவானிய ருஷ்ய மொழியை நிலைபெறச்செய்ய முயற்சி செய்த வேளையில்தான் அலெக்சாண்டர் புஷ்கின் நவீன ருஷ்ய இலக்கியத்தின் மேதைமைக்குத் தலைமை தாங்கினார். உறங்கிக்கிடந்த ருஷ்ய ஆன்மாவைத் தட்டி எழுப்பினார்.

புஷ்கினை ருஷ்ய மக்கள் கொண்டாட காரணம் இருந்தது. முதலாவதாக, மக்களிடமிருந்து விலகியிருப்பதையும் அதன் காரணமாக வந்த ஆணவத்தை பெருமிதமாகவும் கருதிக்கொண்டிருந்த கல்வி கற்ற பிரபுக்குலத்தவர்களின் போலித்தனத்தை அவரால் தோலுரிக்க முடிந்தது. தங்களையும் ருஷ்ய சமூகத்தையும் நிராகரித்து தங்களுக்குள்ளேயே வருந்திக்கொண்டிருந்த மேட்டுக்குடிகளின் எதிர்மறையான நிலைப்பாட்டை புஷ்கின் தனது படைப்புகளின் வழி பதிவு செய்தார்.

The Gipsies படைப்பில் புஷ்கினின் பாத்திரமான அலெகோவும் யூஜின் ஒனிஜீன் படைப்பில் ஒனிஜீனும் மேற்கண்ட வகைமாதிரிகளாகக் கொள்ளலாம். இரண்டாவதாக புஷ்கினின் படைப்புப் பாத்திரங்கள் அனைத்தும் ருஷ்ய மண்ணின் வகை மாதிரியானவை. தாதியானா அப்படிப்பட்ட ஒரு படைப்பு. மேல்தட்டு நாகரிகத்திலும் ஐரோப்பிய வகை நாகரிகத்திலும் காணக்கிடைக்காத ருஷ்யாவின் ஆன்ம வேரிலிருந்து சத்துகளைக் கிரகித்து தன் பாத்திரங்களை புஷ்கின் படைத்தார். மூன்றாவதாக உலகம் முழுமைக்குமான முரண்களுக்கு இணக்கம் காணுதலின் முயற்சியில் தன்னுடைய படைப்புகளின் வழியே புஷ்கின் ஈடுபட்டார். நாடோடிகள் போன்று அலைந்து

திரிதலை அடிப்படையான ருஷ்யப் பண்பாக புஷ்கின் தனது படைப்புகளில் குறிப்பிடுகிறார்.

ருஷ்யாவின் மாபெரும் எழுத்துகளை 'பிற்போக்குக் குப்பைகள்' என புரட்சிக்குப் பிந்தைய சோவியத் ருஷ்ய கம்யூனிச அரசுகள் ஒதுக்கித் தள்ளிய போதிலும் புஷ்கினின் எழுத்துகளை மட்டும் உச்சியில் வைத்துக் கொண்டாடவே செய்தன. தன் இளம் வயதிற்குள் தன் படைப்பாற்றலின் உச்சியில் இருந்தபோது, அந்த மாபெரும் கவி அகால மரணத்தைத் தேடிக்கொண்டவன். அம்மாபெரும் கவி குறித்துதான் தஸ்தயேவ்ஸ்கி சிறப்பான உரை ஒன்றை நிகழ்த்துகிறார். அவரது உரை முழுவதும் புஷ்கினின் முக்கியமான காவியமான 'ஈஜின் ஒனிஜின்' குறித்துத்தான் அமைகிறது.

ஒனிஜீன் பீட்டர்ஸ்பர்க் நகர பிரபுக் குலத்தின் சிறு குழுவைச் சேர்ந்தவன். அக்குழுவின் பிறரைப் போலவே பொறுமையின்றியும் இறுமாப்புடனும் நடந்து கொள்பவன். மக்களிடமிருந்து அந்நியப்பட்டு, குடியானவர் உழைப்பை அடிப்படையாகக் கொண்டு, அய்ரோப்பியக் கல்வி சார்ந்து இயங்கியது இக்குழு. இறந்துபோன தன் மாமாவின் சொத்துகளுக்கு அதிபதியாகியவன். சமூகத்திலிருந்து அந்நியத்தன்மையை விரும்பியவன். தன் சொந்த மண்ணில் உழைப்பது சாத்தியமற்றது என்று எண்ணியவன். தான் பங்கேற்கும் ஒரு கிராமப்புற நிகழ்வில் தாதியானாவை சந்திக்கிறான். அவள் அழகும் அறிவும் அவனுக்குப் பிடித்திருக்கிறது. தாதியானாவும் அவனை விரும்புகிறாள். தன் காதலைத் தெரிவிக்கிறாள். ஆனால், ஒனிஜீன் அக்காதலை ஏற்றுக்கொள்ளவில்லை. 'மறைந்திருக்கும் சோர்வின் அரக்கத்தலைவனால்' பாதிக்கப்பட்டுள்ளான் என தஸ்தயேவ்ஸ்கி ஒனிஜீன் குறித்து குறிப்பிடுவது முற்றிலும் பொருத்தமானதே.

தாதியானாவின் காதலை நிராகரித்து விட்டதோடு தன் நண்பன் லென்ஸ்கியையும் கொலை செய்கிறான் ஒனிஜீன். பின்னர் ஒனிஜீன் நாடோடியாக ருஷ்யாவைச் சுற்றுகிறான். சில ஆண்டுகள் கழித்து பீட்டர்ஸ்பர்க்கில் நடக்கும் நிகழ்வொன்றில் பீட்டர்ஸ்பர்க்கே புகழும் ஒரு அழகு மங்கையைக் கண்ணுறுகிறான். அவள் வேறு யாருமல்ல, தாதியானாதான். இப்போது அவள் சற்றே வயதான ஒரு ராணுவ ஜெனரலின் மனைவி. ஒனிஜீன் அதிர்ச்சி அடைந்தாலும் இப்போது தாதியானா மீது காதல் வசப்படுகிறான்.

தன் காதலை தாதியானாவிடமும் தெரிவிக்கிறான் ஒனிஜீன். அவனுடைய அன்பை ஏற்றுக்கொள்ளும் தாதியானா, அவனுடன் கூட வர மறுக்கிறாள். செல்வச் செழிப்பும் இளமையும் தன் மீது அளவிலா காதலும் கொண்டுள்ள ஒனிஜினைப் பின் தொடர்ந்து செல்ல தாதியானா விரும்பவில்லை. தான் இளமையில் அவன் மீது காதல் கொண்டது உண்மைதான். ஆனால், அதை அவன் அப்போது ஏற்றுக்கொள்ளவில்லை. பிறகு குடும்ப சூழலில் தாயின் மன்றாடுதலின்பேரில் சற்றே வயதான ராணுவ ஜெனரலை அவள் தன் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக்கொள்கிறாள். இப்போது அந்த வயதான மனிதன் அவளுக்கு கணவன். அக்கணவனின் மூலம் செயின்பீட்டர்ஸ்பர்க் நகரில் ஒரு செல்வாக்கான சீமாட்டியாக அவள் வலம் வருகிறாள். ஒனிஜீன் பின் செல்ல மறுப்பதற்கு அதுதான் காரணமா? இல்லை. இப்போதும் அவள் பழைய தாதியானாதான். தன் கிராமத்து நினைவுகளில் வாழும் அதே பழைய தாதியானாதான். ஆனால், இப்போது அவள் வேறொருவரின் மனைவி. தாதியானாவை மனைவியாகப் பெற்றதன் மூலம் பீட்டர்ஸ்பர்க் சமூகத்தில் அந்த வயதான ராணுவ ஜெனரலின் ஆன்ம பலமும் கம்பீரமும் உயர்ந்திருக்கிறது. அவர் தாதியானாவை உயர்வாக மதிக்கிறார்.

தன்னுடைய இன்பத்திற்காக, பிறிதொருவர் துன்பம் அடையுமாறு விட்டுச் செல்வது எப்படி அறமாகும் என்பதே தாதியானாவின் ஆன்மாவிற்குள் எழும் கேள்வியாகும். இதுதான் ருஷ்ய ஆன்மா. திருமண உறவு குறித்த, ஆண் பெண் உறவு குறித்த முரண்பாடுகள் தன் மனதில் சூறாவளி ஏற்படுத்த தாதியானா கிஞ்சித்தும் இடம் கொடுக்கவில்லை. 'ஒனிஜினைப் பின் தொடர்ந்து செல்ல மறுத்துவிடும் தாதியானா, மக்களின் உண்மைக்கேற்ப, ரஷ்ய பாணியில் நடந்து கொண்டாள்' என தஸ்தயேவ்ஸ்கி தன் உரையில் குறிப்பிடுகிறார். ஒரு ருஷ்ய ஆன்மா இப்படித்தான் முடிவெடுக்கும் என அறிவிக்கிறார் தஸ்தயேவ்ஸ்கி. அதனால்தான் தாதியானாவையும் ஒனிஜீனையும் படைத்திட்ட புஷ்கினை ருஷ்ய இலக்கியத்தின் தீர்க்கதரிசனமிக்க, அசாதாரணமான ஒரு புதிராக, தஸ்தயேவ்ஸ்கி கொண்டாடுகிறார்.

தஸ்தயேவ்ஸ்கியின் முழு உரையை அரபிந்தகோஷ் தமிழில் தந்திருக்கிறார். அவருக்கு நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

கல்குதிரை சிறப்பிதழில் இடம்பெற்றிருக்கும் மற்றுமொரு முக்கியமான படைப்பு தஸ்தயேவ்ஸ்கியின் குறுநாவலான 'மரண வீட்டின் குறிப்புகள்' தமிழாக்கம்: வி.சா. வெங்கடேசன். இந்நாவல் குறித்த விமர்சனத்தை தனியாகவே தரவேண்டும். அப்படிப்பட்ட சிறப்பான நாவல் இது.

'தோஸ்தோவ்ஸ்கி : முடிவு பெறாத விவாதங்கள்' என்னும் தோழர் எஸ்.வி. ராஜதுரையின் நீண்ட கட்டுரையும் இச்சிறப்பிதழில் இடம்பெற்றுள்ளது. பிறிதொரு சமயம் வாய்ப்பிருந்தால் இவை குறித்தும் எழுதலாம்.

'செ. சண்முக சுந்தரம்'
<c.shanmughasundaram@gmail.com>

# இரண்டு ஓவியங்கள்

**பாவண்ணன்**


டி.என்.ஏ. பெருமாள்

டி.என்.ஏ. பெருமாள் என்கிற தஞ்சாவூர் நடேசாச்சாரி அய்யம்பெருமாள் என்பவர் இந்தியாவின் மிகச்சிறந்த கானுயிர் புகைப்படக்கலைஞர். 2017ஆம் ஆண்டில் தம் எண்பத்தைந்தாம் வயதில் மறைந்தார். வாழ்க்கையனுபவக் கட்டுரைகளைப் விரும்பிப் படிக்கும் வாசகர்களுக்கு அவர் எழுதிய 'கானுயிர் புகைப்படக்கலைஞனின் நினைவுக்குறிப்புகள்' (Reminiscences of a wildlife photographer) என்னும் புத்தகம் மிகவும் பிடித்தமானதாக இருக்கும்.

அவரைச் சந்தித்து உரையாடிய நினைவலைகளை எழுத்தாளர் எம்.கோபாலகிருஷ்ணன், ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு தொடர்ச்சியாக 'தமிழினி' இணைய இதழில் எழுதிவந்தார். காட்டில் வாழும் ஆந்தைகளைப் படம் பிடிக்கச் சென்ற அனுபவம் சார்ந்து இருவரும் நிகழ்த்திய உரையாடலின் பதிவு ஒரு புனைகதையை வாசிக்கும் அனுபவத்துக்கு நிகரான ஒரு படைப்பாகும்.



எரிக் ஹஸ்கின் என்ற புகைப்படக்காரரைப் பற்றிய குறிப்பொன்று அந்த உரையாடலில் இடம் பெற்றிருக்கிறது. அவரும் பெருமாளைப்போலவே ஆந்தைகளைப் படம் எடுக்கும் கானுயிர் புகைப்படக்கலைஞர். ஒருமுறை அவர் காட்டுக்குள் இரவு வேளையில் காத்திருந்து ஆந்தையைப் படம் எடுத்தபோது, அக்கருவியில் வெளிப்பட்ட வெளிச்சத்தைக் கண்டு அஞ்சிய ஆந்தை வேகமாக வந்து தாக்கியதில் அவர் தன்னுடைய ஒரு கண்ணையே இழந்துவிட்டார். அதற்குப் பிறகும் அவர் சிறிதும் ஆர்வம் குன்றாமல் வாழ்நாள் முழுதும் கானுயிர் புகைப்படக்கலைஞராகவே தொடர்ந்தார். அந்த அனுபவத்தை நினைவூட்டும் விதமாக அவர் தன்னுடைய வாழ்க்கை வரலாற்று நூலுக்கு AN EYE FOR A BIRD என்னும் தலைப்பைச் சூட்டினார்.

ஹஸ்கினின் ஈடுபாட்டையும் அர்ப்பணிப்புணர்வையும் படித்தபோது

என் மனம் சிலிர்த்தது. அதற்குப் பிறகு சிறிது காலம் தொடர்ச்சியாக என்னுடைய உரையாடலில் அவருடைய பெயர் இடம்பெறத் தொடங்கிவிட்டது. ஒரு கலைக்காக தன் வாழ்க்கையையே ஒப்புக் கொடுத்தவராக அவர் என் மனத்தில் இடம் பிடித்துவிட்டார்.

நண்பர் விட்டல்ராவைச் சந்திக்கச் சென்றிருந்த ஒரு சமயத்தில் பெருமாளைப் பற்றியும் ஹஸ்கினைப் பற்றியும் குறிப்பிட்டேன். அவருக்கு அவ்விருவரைப் பற்றியும் ஏற்கனவே தெரிந்திருந்தது. “கானுயிர் புகைப்படங்களுக்காக கண்ணை மட்டுமல்ல, தம் உயிரையே பறிகொடுத்த ஒரு கலைஞரை எனக்குத் தெரியும்” என்றார் விட்டல்ராவ்.

“உயிரையா?” என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

“ஆமாம்” என்று சொன்னார் விட்டல்ராவ். அந்தப் பதிலைக் கேட்டு ஒருகணம் பேச்சற்று உறைந்து விட்டேன். “எப்ப சார் பார்த்தீங்க? எந்த ஊர்க்காரர்? எப்படி இறந்தார்?” என்று கேள்விகளை அடுக்கினேன்.

“இருங்க, இருங்க, சொல்றேன்” என்று என்னை அமைதிப்படுத்தினார் விட்டல்ராவ்.

“நான் சென்னையில பகல் வேளையில டெலிபோன் ஆபீஸ்ல வேலை பார்த்துகிட்டே, சாயங்கால வேளையில ஓவியம் கத்துகிட்டிருந்தேன். அந்த சமயத்துல ஆர்ட்ஸ் ஸ்கூல்ல மாலை வேளையில ஆர்வத்தோடு வந்து கத்துக்கிறவங்களுக்காக ஒரு டிப்ளமோ கோர்ஸ் நடத்திகிட்டிருந்தாங்க. அங்கதான் நானும் படிச்சேன். டிப்ளமா வாங்கின பிறகு மெட்ராஸ் ஆர்ட் க்ளப்ல சேர்ந்து ஓவியம் போட்டிட்டிருந்தேன். அப்ப தனுஷ்கோடிதான் அந்த க்ளப்புக்கு செக்ரட்டரியா இருந்தாரு.”

“சரி.”

“அந்த நேரத்துல ஃப்ரிட்ஸ் க்ரம்ப்பெ (FRIDZ KRUMPE)ன்னு ஒரு கானுயிர் புகைப்படக்கலைஞர் சென்னையில இருந்த மேக்ஸ்முல்லர் பவன்ல தங்கியிருந்தாரு. உலக அளவுல புகழ் பெற்ற பெரிய கலைஞர். யானைகளை படம் எடுக்கறதுல அவருக்கு ஆர்வம் அதிகம் உண்டு. வெவ்வேறு காடுகள்ல வெவ்வேறு விதமா எடுத்த யானைகள் படங்களையெல்லாம் அவர் ஒரு ஆல்பமா வச்சிருந்தாரு. அவருக்கு ஓவியத்துலயும் ஆர்வம் உண்டு. எங்க க்ளப் செக்ரட்டரி தனுஷ்கோடி அவருடைய பெஸ்ட் ஃப்ரண்ட். தனுஷ்கோடிக்கும் ஜெர்மனி மொழி நல்லா தெரியும். பல ஜெர்மனி மொழி நாடகங்கள்ல அவரு நடிச்சிருக்காரு. அவரைப் பார்த்து பேசறதுக்காக க்ரம்ப்பெ அடிக்கடி எங்க க்ளப்புக்கு வந்து போவாரு.”

“சரி.”

“ஒரு தரம் அவர் யானைகளை நேருல பார்த்து படம்புடிக்கிறதுக்காகக் முதுமலைக்குப்போயிருந்தாரு. ஒரு காட்டு யானையைப் படம் எடுக்கற சமயத்துல, யானை அவர் பக்கமா திரும்பிப் பார்த்துட்டுது. நம்மை என்னமோ செய்யப் போறாருங்கற சந்தேகத்துல, அந்த யானை வேகமா ஓடி வந்து அவரை முரட்டுத்தனமா தாக்கிடுடிச்சி. அவரால தப்பிச்சி ரொம்ப தூரம் ஓட முடியலை. இக்கட்டான ஒரு இடத்துல சிக்கிட்டாரு. யானை அவரை தும்பிக்கையால தூக்கி போட்டு மிதிச்சி சாகடிச்சிடுச்சி.”

“ஐயையோ.”

விட்டல்ராவுடைய விவரணையைக் கேட்கக்-கேட்க என் அடிவயிறு கலங்கியது. ஒரு படத்துக்காக உயிரைப் பறிகொடுத்தவர்கள் இங்கும் இருக்கிறார்கள் என்பதை நினைக்கும்போது வியப்பாகவும் இருந்தது.

“அப்புறம்?”

“அப்புறம் என்ன? வனத்துறை ஆட்கள் வழியா செய்தி கிடைச்சி மேக்ஸ்முல்லர் பவன் காரங்க முதுமலைக்குப் போனாங்க. எம்பசி ஆட்களும் வந்தாங்க. அவருடைய உடலை வாங்கி மரியாதையோடு அடக்கம் செஞ்சாங்க. படம் எடுக்கறதுக்காக க்ரம்ப்பெ எடுத்துட்டு போயிருந்த பொருட்களையெல்லாம் வனத்துறை அதிகாரிகள் மேக்ஸ்முல்லர் பவன்கிட்ட ஒப்படைச்சாங்க. அவர் தங்கியிருந்த அறையிலயும் இன்னும் சில பொருட்கள் கிடைச்சது. பவன் பொறுப்பாளர்கள் எல்லாத்தயும் ஒன்னா சேர்த்து எடுத்துவந்து எங்க மெட்ராஸ் ஆர்ட் க்ளப்ல ஒப்படைச்சி, அத வித்து வரக்கூடிய பணத்தை வச்சி க்ரம்ப்பெ பேரால ஒவ்வொரு ஆண்டும் ஒரு விருது கொடுக்கணும்னு கேட்டுகிட்டாங்க.”

“நல்ல திட்டம்தான் சார்.”

“அதுக்கப்புறம் க்ளப் முறையான ஒரு அறிவிப்பை வெளியிட்டு ஏலத்துக்கு ஏற்பாடு செஞ்சாங்க. நானும் என் நண்பர்களும் அந்த ஏலத்துக்குப் போயிருந்தோம். பல பேரு பல பொருட்களை கேட்டு வாங்கினாங்க. நான் சில ப்ரஷ்கள வாங்கிகிட்டேன். அந்த ஏலத்தின் வழியா கணிசமான ஒரு தொகையைத் திரட்ட முடிஞ்சிது. பவன்ல இருந்த ஆட்களும் தம்முடைய பங்களிப்பா ஒரு தொகையைக் கொடுத்தாங்க. எல்லாத்தையும் சேர்த்து ஒரு நல்ல தொகையைத் திரட்டமுடிந்தது. அந்த மொத்த தொகையையும் வங்கி இருப்புல வச்சி, அதன் மூலமா கிடைக்கக்கூடிய வட்டித்தொகையை ஆண்டுக்கு ஒரு தரம் எடுத்து க்ரம்ப்பெ பேருல ஒரு ஓவியப்போட்டி நடத்தி விருது கொடுக்கலாம்னு ஒரு முடிவெடுக்கப்பட்டது. அந்தப் போட்டி எங்க மெட்ராஸ் ஆர்ட் க்ளப் மெம்பர்ஸ்க்கு மட்டுமேயான ஒரு போட்டி. எங்களுக்குள்ள ஒரு போட்டி நடத்தி, அதுல சிறந்த ஓவியரைத் தேர்ந்தெடுத்து கௌரவிக்கணும்ங்கறது அவுங்க


புகைப்படம்: டி.என்.ஏ. பெருமாள்

எண்ணம். அந்தப் போட்டியில சென்னையில இருக்கக்கூடிய பிற அமைப்புகளுக்கு இடமில்லை."

"போட்டிக்கு வேற எந்த நிபந்தனையும் இல்லையா?"

"வாட்டர் கலர் பெயின்ட்டிங்காதான் இருக்கணும்ங்கறதுதான் ஒரே நிபந்தனை. வேற எதுவும் இல்லை. வாட்டர்கலர் பெயின்ட்டிங் போட பொருத்தமான தாள் அந்தக் காலத்துல இந்தியாவுல கிடையாது. லண்டன்லேர்ந்துதான் வரணும். அதுக்கு வாட்மன் ஷீட்னு பேரு. விலையும் அதிகம். ஆனாலும் வேற வழி இல்லாததால, காசிருக்கற காலத்துலயே நாலஞ்சி தாளுங்க மொத்தமா வாங்கி வச்சிகிட்டு ஒன்னொன்னா வரைவோம். பிறகு ரொம்ப காலம் கழிச்சி பாண்டிச்சேரியில ஹேண்ட்மேட் பேப்பர்னு ஒரு தாளை தயார் செஞ்சி விக்க ஆரம்பிச்சாங்க. அது கொஞ்சம் விலை மலிவு. ஆனாலும் வாட்டர்கலர் பெயின்ட்டிங்க்குக்கு அது பொருத்தமா இருக்கும். அதனால கொஞ்சம் கொஞ்சமா எல்லாருமே ஹேண்ட் மேட் பேப்பருக்கே மாறிட்டாங்க."

"நீங்க போட்டியில கலந்துகிட்டதுண்டா?"

"போட்டியில ஓவியம் தீட்டறதுங்கறது ஒரு மகத்தான அனுபவம். அதுல பங்கெடுத்து கிட்டவங்களாலதான் அதை உணரமுடியும். அந்தப் போட்டி ஆரம்பிச்ச வருஷத்துலேர்ந்தே நான் தொடர்ச்சியா பங்கேற்று ஓவியம் தீட்டியிருக்கேன்."

"பரிசு வாங்கியிருக்கீங்களா?"

"போட்டி ஆரம்பிச்சி முதல் மூனுநாலு வருஷத்துல எனக்கு எந்தப் பரிசும் கிடைச்சதில்லை. ஜெயராமன், கே.எஸ்.பாலகிருஷ்ணன், அச்சுதன் கூடலூர் எல்லாரும் வாங்கினாங்க. அதுக்கடுத்த வருஷத்துல நான் வரைந்த ஓவியத்துக்கு முதல் பரிசு கிடைச்சது."

"என்ன மாதிரியான ஓவியம் போட்டீங்க சார், ஞாபகம் இருக்குதா?"

"நல்லாவே ஞாபகம் இருக்குது. அன்னைக்கு ஓவியர் அந்தோணிதாஸ்தான் வகுப்புக்கு வந்திருந்தார். ஒரு மாடலை வரவழைச்சி நிக்கவச்சி போட்டிக்கான ஓவியம் தீட்டணும்ங்கறதுதான் அன்னைக்கு ஒரிஜினல் திட்டமா இருந்தது. துரதிருஷ்டவசமா அன்னைக்கு அந்த மாடல் வரலை. ஒருமுறை அறிவிச்ச போட்டியை ஒத்திவைக்க அந்தோணிதாஸ்க்கு விருப்பமில்லை. திட்டமிட்ட ஒரு விஷயத்தை நடத்தியே முடிக்கணும்ங்கறதுல ரொம்ப தீர்மானமா இருந்தாரு அவரு."

"நல்ல கொள்கைதான். வேற மாடலை ஏற்பாடு செஞ்சாரா?"

"அப்படியெல்லாம் செய்யலை. அந்த நேரத்துல அவருகிட்ட வாட்69 விஸ்கி பாட்டில் ஒன்னு காலியா இருந்தது. அந்த காலி பாட்டிலை கொண்டுவந்து மேசை மேல வச்சாரு. எங்க ஸ்கூலை சுத்தி வேலியோரத்துல ரோஜாப்பூ கலர்ல சின்னச்சின்னதா பேரு தெரியாத பூக்கள் பூத்திருந்தன. அந்தப் பூக்களையும் இலைக்கொத்துகளையும் கொண்டுவந்து அந்த விஸ்கி பாட்டிலுக்குள்ள வச்சி நிரப்பச் சொன்னாரு. மதுப்புட்டியிலிருந்து

பூக்களும் இலைகளும் முளைச்சி நிக்கிறமாதிரியான தோற்றம். அதுதான் மாடல், அதை வரைங்கப்பான்னு சொல்லிட்டாரு அந்தோணிதாஸ்.”

படைப்பூக்கம் மிக்க ஒருவரால் மட்டுமே அப்படி யோசிக்கமுடியும் என்று தோன்றியது. அப்படி ஒரு திட்டத்தை யோசித்ததற்காகவே அந்த ஆசிரியரைப் பாராட்டவேண்டும் போல இருந்தது.

“பூக்கள் செருகப்பட்ட மதுப்புட்டி. நல்ல க்ரியேட்டிவான மூளைதான் சார் அவருக்கு. அழகா சிம்பாலிக்காவும் இருக்குது. அந்த இடத்துல வேற யாரா இருந்தாலும் போட்டியையே தள்ளித்தான் வச்சிருப்பாங்க. அபூர்வமா சில பேராலதான் இப்படி யோசிக்கமுடியும்.”

“அந்தோணிதாஸ் மிகச்சிறந்த கலைஞர். அப்படிப்பட்ட ஆசிரியர்கிட்ட நான் ஓவியம் கத்துகிட்டேன்ங்கறது என்னுடைய அதிர்ஷ்டம்னுதான் சொல்லணும்.”

“நீங்க அந்தப் புட்டியை வரைஞ்சீங்களா?”

“அந்த கான்செப்ட் எனக்கு ரொம்ப இன்ட்டரஸ்டிங்கா இருந்தது. ஒவ்வொரு பூவுடைய நிறத்தையும் வேறுபடுத்திக் காட்டி நான் அந்த ஓவியத்தை ரொம்ப உற்சாகத்தோடு வரைஞ்சி முடிச்சேன். அந்தோணிதாஸ்க்கு அந்தப் படம் ரொம்ப புடிச்சிருந்தது. அந்தப் போட்டியில அந்த ஓவியத்துக்குத்தான் க்ரம்ப்பெ விருது கிடைச்சது.”

“அம்பது வருஷத்துக்கு முன்னால விருது வாங்கிய கதையா இருந்தாலும், நீங்க சொல்றதை கேக்கும்போது என்னமோ நேத்து நடந்த போட்டியில கலந்துகிட்டு விருது வாங்கிட்டு வந்த கதையைக் கேக்கறமாதிரி இருக்குது. அந்த நேரத்துல உங்க மனசுல என்ன ஓடிச்சி சார்?”

“ரொம்ப மகிழ்ச்சியா இருந்தது பாவண்ணன். நாம செஞ்சிட்டிருக்கிற வேலை உண்மையிலேயே தகுதியான ஒரு வேலைதான்ங்கறத இந்த மாதிரியான நேரங்கள்லதான் நம்மால உணரமுடியும்.”

“என்ன பரிசு கொடுத்தாங்க?”

“ஒரு தங்கப்பதக்கமும் ஒரு சான்றிதழும் கொடுத்தாங்க.”

“கண்காட்சி முடிஞ்ச பிறகு அந்த ஓவியத்தை என்ன செஞ்சீங்க? வீட்டுக்கு கொண்டுவந்துட்டீங்களா?”

“ஆமாம்.”

எனக்கு அந்த ஓவியத்தைப் பார்க்கவேண்டும் என்று ஆவலாக இருந்தது. “இருக்குதா சார்? இன்னும் வச்சிருக்கீங்களா?” என்று அவசரமாகக் கேட்டேன்.

விட்டல்ராவ் இல்லை என்பதன் அடையாளமாக இரு கைவிரல்களையும் விரித்து அசைத்தார். ‘த்ச்’ என்று நாக்கு சப்புக் கொட்டியபடி உதட்டைப் பிதுக்கினார்.

“ஏன் சார்? என்ன செஞ்சீங்க?”

“அப்ப சென்னை ஜி.எச்.ல வரதராஜன்னு ஒரு சீஃப் சர்ஜன் இருந்தார். இக்கட்டான பல நேரங்கள்ல அவர் எனக்கு உதவி செஞ்சிருக்காரு. அதுக்கு ஒரு நன்றிக் கடனா, அந்த ஓவியத்தை அவருக்கு அன்பளிப்பா கொடுத்துட்டேன். அவர் அந்த ஓவியத்தை தன்னுடைய அறையிலயே மாட்டி வச்சிகிட்டார்.”

“அவர் ஓவியத்துல்ல ஈடுபாடுள்ளவரா?”

“ஆமாமாம். நல்ல ரசனை உள்ள மனிதர்தான் அவரு. அவருடைய மனைவி கூட கலைநாட்டம் உள்ளவருதான். நடிப்பு மேல அவருக்கு ரொம்ப பிரியமுண்டு. ஜெர்மன் மொழியை நல்லா பேசுவாங்க. தனுஷ்கோடி கூட சேர்ந்து நிறைய நாடகங்கள்ல நடிச்சிருக்காங்க.”

“அவுங்க பேரு என்ன சார்?”

“சுதா. என் மனைவிக்கு பெஸ்ட் தோழி அவுங்க. வரதராஜனுக்கும் சுதாவுக்கும் ஒரு மகன் இருந்தான். அவன் பேரு ரகு. அவனும் படிச்சி முடிச்சி அப்பாவை மாதிரியே டாக்டராயிட்டான். அம்மா பேருலயே சுதா சர்ஜிக்கல் கிளினிக்னு ஒரு கிளினிக் வச்சி நடத்தறான்.”

“அந்த பூப்புட்டி ஓவியம் இன்னும் அந்த கிளினிக்ல இருக்குமா?”

“தெரியலையே பாவண்ணன். வரதராஜன் நடத்திய கிளினிக்ல நான் அந்தப் படத்தைப் பார்த்திருக்கேன். ரகு வச்சிருக்காரா, இல்லையான்னு தெரியலை. நான் பார்த்ததில்லை.”

“அந்த ஓவியத்துடைய ஞாபகமா உங்ககிட்ட ஒன்னும் இல்லையா சார்?”

விட்டராவ் உதட்டைப் பிதுக்கியபடி புன்னகைத்தார். “என்னுடைய ஞாபகத்தைத் தவிர, வேற எதுவுமே எங்கிட்ட இல்லை. அந்தக் காலத்துல கேமிரா விலையெல்லாம் ரொம்ப அதிகம். எனக்குக் கிடைச்ச குறைச்சலான சம்பளத்துல ஒரு சாதாரணமான கேமிரவைக்கூட வாங்கற நிலையில நான் இல்லை. எல்லாக் கஷ்டங்களுக்கும் நடுவுலயும் ஏதோ படிச்சிட்டிருந்தேன், எழுதிட்டிருந்தேன். ஓவியம் போட்டிட்டிருந்தேன். அதுவே எனக்கு பெரிசா தெரிஞ்சது. அந்தக் காலத்துல எல்லாரும் ப்ளாக் அண்ட் ஒயிட் கேமிராவைத்தான் வாங்கி பயன்படுத்திகிட்டிருந்தாங்க. ஒரு நண்பர் எனக்காக அந்த வாட்டர் கலர் பெயிண்ட்டை ஒரு ஃபோட்டோ






புகைப்படம்: டி.என்.ஏ. பெருமாள்

எடுத்துக் கொடுத்தார். அதுதான் என்கிட்ட இருக்கிற ஒரே அடையாளம். ஆனா ஒரு கலர் படத்தை ஒரு கறுப்புவெள்ளை படமா பார்க்கறதுக்கு சங்கடமாதான் இருக்கும்."

"பரவாயில்லை சார். ஒரு தரம் பார்த்தா நல்லா இருக்குமேன்னு நெனச்சேன். எப்பனா நேரம் இருக்கும்போது, எனக்காக ஒருதரம் தேடி எடுத்து வைங்க சார்."

"இருக்கும். இருக்கும். எங்கயாவது ஒரு பொட்டிக்குள்ள இருக்கும். தேடிப் பார்த்து எடுத்துவைக்கறேன்."

நண்பர்களோடு சேர்ந்தும் தனியாகவும் பலமுறை ஓவியக் கண்காட்சி வைத்த அனுபவங்களையெல்லாம் அவர் ஏற்கனவே பலமுறை என்னிடம் சொன்னதுண்டு. அவையெல்லாம் அந்த நேரத்தில் நினைவுக்கு வந்தன. கண்காட்சி அனுபவங்களின் பின்னணியில் 'காலவெளி' என்கிற தலைப்பில் அவர் எழுதிய ஒரு நாவலையும் நினைத்துக்கொண்டேன். எப்போதோ ஒருமுறை பெங்களூரில் நடைபெற்ற கண்காட்சியில் கலந்துகொண்டதைத் தெரிவித்த நினைவிருந்தது. ஆனால், முழு தகவல் நினைவில் இல்லை. அதைத் தெரிந்துகொள்ளும் ஆவலில் அதையே அவரிடம் ஒரு கேள்வியாகக் கேட்டேன்.

"அந்தக் காலத்துல தேசிய அளவுல ஒவ்வொரு ஆண்டும் மாக்ஸ்முல்லர் பவன்ல ஓவியக்கண்காட்சி நடக்கும். ஒவ்வொரு நகரத்துலயும் ஒவ்வொரு அமைப்பிலேருந்தும் சிறப்பான ஓவியங்களைச் சேகரித்து ஏதாவது ஒரு பவன்ல ஒரு கண்காட்சியை ஏற்பாடு செய்வாங்க. சுற்றுமுறையில ஒவ்வொரு வருஷமும் ஒரு ஊருல இருக்கற பவன்ல அந்தக் கண்காட்சி நடக்கும். ஒருமுறை பெங்களூருல இருக்கற மாக்ஸ்முல்லர் பவன்ல அந்த மாதிரியான ஒரு கண்காட்சிக்கு ஏற்பாடு செஞ்சிருந்தாங்க. அந்தக் கண்காட்சிக்கு நான் வரைஞ்ச ரெண்டு ஓவியங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு போயிருந்தது. அதனால நான் அந்தக் கண்காட்சியில கலந்துக்கறதுக்காக சென்னையிலிருந்து பெங்களூருக்கு வந்திருந்தேன். ஒரு நண்பருடைய அறையில தங்கி, தெனமும் கௌம்பி கண்காட்சியை பார்க்கறதுக்காக வந்தேன். அந்தக் கண்காட்சியில ஏறத்தாழ இருநூறு ஓவியங்கள் வச்சிருந்தாங்க. என்னுடைய ரெண்டு படங்களும் அந்தக் கண்காட்சியில வித்துடுச்சி. ஒவ்வொரு ஓவியத்துக்கும் எனக்கு ஐநூறு ரூபா கிடைச்சது."

"ஆயிரம் ரூபாயா?"

"ஆமாம். ஆயிரம் ரூபாய். அந்தக் காலத்துல பெரிய தொகை. ஆனால், அந்த ஓவியங்களை வரையறதுக்கும் அதுங்களுக்கு ஃப்ரேம் போட்டு பாதுகாக்கறதுக்கும் ஒவ்வொரு முறையும் படங்கள ஒரு இடத்துலேர்ந்து இன்னொரு இடத்துக்கு ரிக்ஷாவுல ஏத்தி எடுத்துட்டுப் போய் திரும்பி வர்ரதுக்கு நான் செஞ்ச செலவை நினைச்சிப் பார்த்தா, அதுவே பல ஆயிரம் தாண்டும்."

"அந்தப் படங்கள் எல்லாம் யாரோ ஒருவருடைய வீட்டிலோ அலுவலகத்திலோ ஏதோ ஒரு சுவர்ல ஒரு ஒப்பனைப்பொருளா தொங்கிகிட்டிருக்கலாம். அந்த ஓவியத்தை நீங்கதான் வரைஞ்சீங்கங்கறதுக்கு அடையாளமா உங்க கையெழுத்து கூட அதுல இருக்கலாம். ஆனா, உங்ககிட்ட எதுவுமே இல்லையே, அதை நினைச்சாதான் சார் கஷ்டமா இருக்குது..."

"என்ன செய்யறது பாவண்ணன்? வேணும்ன்னு நான் எதையும் செய்யலை. ஆனா, எப்படியோ, ஒன்னொன்னா என் கையை விட்டு போயிடுச்சி."

உரையாடிக்கொண்டே வந்த விட்டல்ராவ் திடுமென ஏதோ நினைவில் மூழ்கி அமைதியாகி விட்டார். சில கணங்களுக்குப் பிறகு அவரை மீண்டும் உரையாடலில் இழுக்கும் பொருட்டு, "உங்க படங்களைப் பார்க்க முடியலைங்கறது மனசுக்குள்ள ஒரு குறையாவே இருக்குது. அது போகட்டும். நீங்க எந்த எந்த மாதிரியான தீம்ல உங்க ஓவியங்களை வரைஞ்சியிருக்கீங்க. அதைப் பத்தி சொல்லுங்க சார். என் கற்பனையில அதை நான் ஒரு ஓவியமா பார்த்துக்கறேன்" என்று கேட்டேன்.

"அதுவா?" என்று முகத்தை அசைத்தபடி புன்னகைத்தார். பிறகு ஒரு பெருமூச்சோடு,

“எல்லாப் படங்களைப் பத்திய ஞாபகமும் மனசுல இருக்குதுன்னு சொல்லமுடியாது. ஆனா முக்கியமான சில படங்களைப்பத்திய ஞாபகம் மட்டும் தெளிவா இருக்குது” என்றார்.

“சொல்லுங்க சார். எது நல்லா ஞாபகத்துல இருக்குதோ, அதை மட்டும் சொல்லுங்க. அது போதும்.” என்று நான் அவரை உற்சாகப்படுத்தினேன்.

“மெட்ராஸ் வெயில் எப்படி இருக்கும்ங்கறத காட்டறத ஒரு தீமா வச்சிகிட்டு ஒருமுறை ஒரு ஓவியம் வரைஞ்சிருந்தேன். கடுமையான வெயில். நடமாட்டமே இல்லாத ஒரு புறநகர்ப்பகுதி. மொத்த லேண்ட்ஸ்கேப்லயும் ஒரே ஒரு பனைமரம் மட்டும் உயரமா நிக்குது. அந்த மரத்தடியில பஸ்சுக்காக ஒரு குடும்பம் நின்னுகிட்டிருக்குது. புருஷன், பொண்டாட்டி ரெண்டு பேரும் வெயில்ல பஸ் வர்ர பாதையை பார்த்துகிட்டு நிக்கறாங்க. பையனும் பொண்ணுமா அவங்களுடைய ரெண்டு புள்ளைங்களும் ஒரே குடைக்குள்ள நிழல்ல ஒதுங்கி நிக்கிறாங்க.”

அவருடைய விவரணையைக் கேட்கக்கேட்க எனக்குள் உற்சாகம் பெருக்கெடுத்தோடியது. “நீங்க சொல்லச்சொல்ல அந்த ஓவியத்தையே மனசுக்குள்ள பார்க்கிறமாதிரி இருக்குது சார். வாட்டர்கலர்ல அந்த வெயிலை எப்படி காட்டியிருப்பீங்கங்கறத கூட என்னால கற்பனை செஞ்சிக்க முடியுது...” என்று மகிழ்ச்சியைத் தெரிவித்தேன்.

“இன்னொரு ஓவியம் மெட்ராஸ் மழை எப்படி இருக்கும்ங்கறதை உணர்த்தற ஓவியம். சோன்னு கொட்டற மழையில ஒரு தெருவுக்குள்ள பல பேரு சுத்தி சுத்தி நடக்கறாங்க. மழை பெய்யுதேன்னு மத்த ஊருல ஒதுங்கி நிக்கிறமாதிரி மெட்ராஸ்ல யாரும் ஒதுங்கி நிக்கற பழக்கமில்லை. நடக்கறது நடக்கட்டும்னு எறங்கி போயிட்டே இருப்பாங்க. அவுங்க எல்லாருக்கும் நேரம்தான் முக்கியம். அந்த மாதிரியான ஒரு மழை நாள்தான் அந்த ஓவியம். கொட்டோ கொட்டுனு அடிக்கிற மழையில ஏராளமான குடைகள் மட்டுமே தெரியற காட்சி அது. விதம்விதமான குடைகள் தலைக்கு மேல விரிஞ்சிருக்குது. அதே மாதிரி எல்லாருடைய கால்கள்லயும் விதம்விதமான ஹவாய் செருப்புகள். யாருடைய முகமும் ஓவியத்துல கெடையாது. எல்லாருமே முதுகுப்பக்கம் மட்டுமே தெரியற மனிதர்கள்.”

விட்டல்ராவ் அளித்த தகவல்களை வைத்தே அந்த ஓவியம் எப்படி இருந்திருக்கக்கூடும் என்பதை என்னால் உணர்ந்துகொள்ள முடிந்தது. சென்னையில் மழையைக் கண்டதும் மனிதர்கள் பொறுமையே இல்லாமல் நடந்துகொள்கிற விதத்தை நேரில் பலமுறை பார்த்த அனுபவத்தில் அவர் முன்வைக்கும் காட்சியை எளிதாக ஊகித்துக்கொள்ள முடிந்தது. “ரொம்ப அருமையான சித்தரிப்பு சார்.” என்றேன். அவர், “அந்தக் காலத்துல ஓவியர் பணிக்கர் அந்த ஓவியத்தை ரொம்பவும் ரசிச்சிப் பார்த்தாரு. என்னை பக்கத்துல அழைச்சி பாராட்டிட்டு போனாரு.” என்று தனக்குத்தானே சொல்லிக் கொள்வதுபோல புன்னகைத்தபடியே சொன்னார்.

அடுத்த ஓவியத்துக்கான நினைவை அசைபோடும் விதமாக சில நொடிகள் பக்கவாட்டில் மேசை மீதிருந்த புத்தக அடுக்கை வேடிக்கை பார்த்தார்.

“இன்னொரு முக்கியமான ஓவியத்தைப் பத்தி சொல்லணும். ஒரு இறுதி ஊர்வலம்தான் அந்த ஓவியத்துடைய மையக்கரு.”

“என்ன, இறுதி ஊர்வலமா? ரொம்ப இண்டரஸ்டிங்கா இருக்குதே சார். அப்படி கூட வரைவாங்களா?”

“இதைத்தான் வரையணும், இதையெல்லாம் வரையக்கூடாதுன்னு சொல்றது மாதிரி ஏதாவது விதிமுறை இருக்குதா என்ன?”

“அப்படியெல்லாம் ஒன்னுமே கெடையாது சார். பூமிக்கு மேலே, வானத்துக்குக் கீழே எதை வேணும்ன்னாலும் வரையலாம்.”

“ஒரு பகல் நேரத்துல ஒரு பிராமணனுடைய இறுதி ஊர்வலம் போவுது. பாடையை தூக்கிட்டு போற நாலு பேரு. முன்னால கொள்ளிச்சட்டியோடு ஒருத்தர். பாடைக்குப் பின்னால ஒருத்தர். அவ்ளோதான் ஊர்வலம். நான் சென்னையில ஏராளமான இறுதி ஊர்வலங்களைப் பார்த்திருக்கேன். பல ஊர்வலங்கள் ஜேஜேன்னு இருக்கும். அம்பது, நூறு பேருக்கு மேல் கலந்துக்குவாங்க. மேளதாளம், ஆட்டம், வெடி எல்லாம் இருக்கும். ஆனா பிராமணர்களுடைய இறுதி ஊர்வலத்துல பாடைக்குப் பின்னால அதிகமான ஆட்கள் போறதில்லை. அது ஒரு துயரமான உண்மை. அதைத்தான் அந்த ஓவியத்துல மௌனமா சுட்டிக் காட்டியிருந்தேன்.”

விட்டல்ராவ் சொன்னதை ஒரு கணம் மனத்துக்குள் அசைபோட்டுப் பார்த்தேன். என் அனுபவத்திலும் நான் அப்படிப்பட்ட பல காட்சிகளைப் பார்த்ததுண்டு.

“உண்மைதான். நீங்க சொல்றது நூத்துக்கு நூறு உண்மை. எனக்கும் அதையெல்லாம் பல இடங்கள்ல பார்த்திருக்கேன் சார்.”

“அந்த ஓவியத்தை யாரோ இருநூறு ரூபா கொடுத்து வாங்கிட்டு போயிட்டாங்க.”

“ரொம்ப வித்தியாசமான கருவை எடுத்துத்தான் ஓவியங்களை வரைஞ்சிருக்கீங்க. நீங்க சொல்லச்சொல்ல, அந்த ஓவியம் எப்படி இருந்திருக்கும்ங்கற என்னால கற்பனை செஞ்சி பார்க்க முடியுது சார்.”



புகைப்படம்: டி.என்.ஏ. பெருமாள்

“இன்னொரு முக்கியமான ஓவியம் வரைஞ்ச சந்தர்ப்பம் ஞாபகம் வருது. அதை நீங்க அவசியம் தெரிஞ்சிக்கணும்.”

“சொல்லுங்க சார்.”

“அந்தக் காலத்துல பாகிஸ்தானுக்கும் பங்களாதேசத்துக்கும் சண்டை நடந்த சம்பவம் உங்களுக்கு ஞாபகம் இருக்குதா?”

“நல்லாவே ஞாபகம் இருக்குது சார். நான் அப்ப ஹைஸ்கூல்ல ஒன்பதாவது வகுப்புல இருந்தேன். அந்தப் போர்க்காட்சிகளுடைய படங்களை தினத்தந்தியில ஒவ்வொரு நாளும் ஒரு பக்கம் முழுக்க அச்சடிச்சி, பக்கத்துலயே செய்தியும் போடுவாங்க. நாங்க அதை ஒவ்வொரு நாளும் பாடபுஸ்தகத்தைப் படிக்கிறமாதிரி படிப்போம். அந்த நாளையெல்லாம் மறக்கமுடியாது சார்.”

“அந்த நேரத்துல அமெரிக்க அரசாங்கம் பாகிஸ்தானுக்கு ஆதரவான நிலைபாட்டை எடுத்தது. பாகிஸ்தானுக்கு உதவி செய்யணும்ங்கற எண்ணத்தோடு ஒரு கப்பல் படையை கல்கத்தாகிட்ட நிக்கிற மாதிரி அனுப்பினாங்க. கப்பல்படைக்கு இங்க்லீஷ்ல ஃப்ளீட்னு சொல்வாங்க. அமெரிக்க கப்பல் நடமாட்டத்தைப் புரிஞ்சிகிட்ட ரஷ்யா அவனை முந்திகிட்டு தன்னுடைய கப்பல் படையை கல்கத்தா பக்கம் போய் நிக்கிறமாதிரி அனுப்பினாங்க. ரஷ்யக் கப்பல பார்த்ததும் அமெரிக்கக் கப்பல் திரும்பிப் போயிடுச்சி. அதை வேடிக்கை பார்த்த சீனாக்காரன் அந்த சம்பவத்தை கிண்டல் செய்யற மாதிரி,‘இவையெல்லாம் வெறும் காகிதக்கப்பல்கள்’னு கிண்டல் செஞ்சி எழுதினான். இங்க்லீஷ்ல பேப்பர்ஸ் டைகர்னு சொல்ற மாதிரி பேப்பர்ஸ் ஃப்ளீட். அமெரிக்கன் ஃப்ளீட், ரஷ்யன் ஃப்ளீட், பேப்பர்ஸ் ஃப்ளீட்னு பத்திரிகையில தினமும் செய்தி வரும். அதைப் படிச்சிப் படிச்சி அந்த வார்த்தை என் மனசுல பதிஞ்சிடுச்சி. சாதாரண கப்பல், ஒற்றைக் கப்பல், இரட்டைக்கப்பல், கத்திக்கப்பல், பாய்மரக்கப்பல்னு விதவிதமா அந்த விளையாட்டுக் கப்பல்களுடைய வடிவங்களை படமா வரைஞ்சி, பொதுவா காகிதக் கப்பல்னு தலைப்பு கொடுத்திருந்தேன். எங்க செக்ரட்டரி தனுஷ்கோடி அந்த ஓவியத்தைப் பார்த்துட்டு,படம் தனிப்பட்ட விதத்துல நல்லாதான் இருக்குது. ஆனா ஒரு பொலிட்டிக்கல் ரெஃபரென்ஸ் இருக்கறதால கண்காட்சியில வைக்கறதுக்கு தேர்ந்தெடுக்க முடியாதுன்னு சொல்லி திருப்பிக் கொடுத்துட்டாரு.”

அதைத் தொடர்ந்து அவரால் பிற ஓவியங்களை உடனடியாக நினைவுகூர்ந்து சொல்லமுடியவில்லை. நானும் அதை வலியுறுத்த விரும்பாததால் அடுத்து எதைப் பற்றிப் பேசலாம் என உள்ளூர யோசனையில் மூழ்கியிருந்தேன்.

“நாங்க இருந்தது வாடகை வீடு. வரையற எல்லா ஓவியங்களையும் ஃப்ரேம் போட்டு பாதுகாக்கிற அளவுக்குஇட வசதியும்கிடையாது.இன்னொருபக்கம் பண வசதியும் கிடையாது. அந்தக் காரணத்தாலேயே யாராவது ஆசைப்பட்டு கேட்டாங்கன்னு சொன்னா, எடுத்து கொடுத்துடுவேன். அப்படித்தான் பல ஓவியங்களை கொடுத்துட்டேன்.”

எனக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. எதுவும் பேசாமல் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

“எல்லாத்தயும் கொடுத்துட்டாலும் ஒரு இருபது படங்களை மட்டும் ரொம்ப காலத்துக்கு பாதுகாப்பா கட்டி வச்சிருந்தேன். அப்ப அயர்லாந்துலேர்ந்து ஒரு கிறித்துவப் பாதிரியார் மௌண்ட் சர்ச்சுக்கு வந்திருந்தாரு. நான் அப்ப மௌண்ட் எக்சேஞ்ச்லதான் வேலை செஞ்சிட்டிருந்தேன். எங்க ஆபீஸ்ல கேப்ரியேல்னு ஒரு கேஷியர் இருந்தாரு. அவரு எனக்கு ரொம்ப நெருக்கமானவரு. அந்தப் பாதிரியாருக்கு ஓவியம்னா ரொம்ப புடிக்கும்னு கேப்ரியேல் சொன்னாரு. உங்ககிட்ட ஓவியங்கள் இருந்தா கொண்டுவாங்க, அவருகிட்ட காட்டலாம், ஒருவேளை அவருக்கு அந்தப் படங்கள் புடிச்சிருந்தா, அவர் அதை பணம் கொடுத்து வாங்கிக்குவாருன்னு சொன்னாரு.”

“சரி.”

“நானும் அதை நம்பி எல்லாப் படங்களையும் ஒரு ரிக்‌ஷாவுல ஏத்திட்டு சர்ச்சுக்கு போனேன்.கேப்ரியேல் என்னை அவருக்கு அறிமுகப்படுத்தினாரு. அவரும் ஓவிய ரசனை உள்ளவருதான். ஓவியங்களைப் பத்தி ரொம்ப நேரம் பேசிட்டிருந்தாரு. அப்புறமா நான் கொண்டு போயிருந்த ஓவியங்களை எல்லாம் பிரிச்சி பார்த்து சந்தோஷப்பட்டாரு. இங்கயே வச்சிட்டுப் போங்கன்னு சொன்னாரு. எல்லாத்தயும் அவரே எடுத்துக்குவாரோ என்னமோன்னு நெனச்சி நானும் சந்தோஷத்தோடு அந்தப் படங்களை அங்கயே விட்டுட்டு வந்தேன். அதுக்கப்புறம் நான் சர்ச் பக்கம்

போகலை. கேப்ரியேல்கிட்ட மட்டும் ஒன்னுவிட்டு ஒருநாள் ஓவியங்களை பத்தி பாதிரியார் என்ன சொன்னார்னு கேட்டு விசாரிச்சிட்டிருந்தேன். என்கிட்ட சொல்றமாதிரி தகவல் எதுவும் அவர்கிட்ட இல்லை. இன்னைக்கு சொல்வாரு, நாளைக்கு சொல்வாருன்னு நெனச்சி நானும் ஒவ்வொரு நாளும் ஆவலோடு காத்திட்டிருந்தேன். மொத்தமா எடுத்துகிட்டாலும் பரவாயில்லை, ஒரு தொகை கிடைக்கும், ஏதாவது ஒரு செலவுக்கு ஆகும்னு நெனைச்சி பொறுமையா இருந்தேன்" என்று சொல்லிக்கொண்டு வரும்போதே அவர் முகத்தில் புன்னகைக் கோடுகள் விரிந்தன.

"என்ன சார் சிரிக்கறீங்க? நீங்க எதிர்பார்த்தது நடந்ததா நடக்கலையா?"

நான் அப்படிக் கேட்டதும் அவர் வாய்விட்டுச் சிரித்துவிட்டார். அது அடங்க சிறிது நேரம் பிடித்தது. ஏதோ பிழையாகக் கேட்டுவிட்டோமோ என்று கூச்சமாக இருந்தது. "ஏன் சார் சிரிக்கறீங்க?" என்று அடங்கிய குரலில் கேட்டேன்.

"என்னை அமைதிப்படுத்தறமாதிரி ஒவ்வொரு நாளும்கேப்ரியேல்எனக்குபதில்சொல்லிட்டிருந்தாரே தவிர, அவருக்கு பாதிரியார் ஊரைவிட்டு புறப்பட்டு போயிட்ட விஷயமே தெரியலை. அவர் கௌம்பிப் போன நாலைஞ்சி நாளுக்குப் பிறகுதான் அவருக்கு சேதியே தெரிஞ்சிருக்குது."

"த்ச், த்ச்."

"நான் கேக்கறதுக்கு முன்னாலயே ஒருநாள் என்கிட்ட வந்து அந்தப் பாதிரியார் அயர்லாந்துக்கே திரும்பிப் போயிட்டாருன்னு சொன்னாரு. சரி, அந்த ஓவியங்களைப் பத்தி என்ன சொன்னாருன்னு கேட்டேன். அவரு ரொம்ப சங்கடப்பட்டுகிட்டே எல்லா ஓவியங்களையும் கையோடு எடுத்துட்டு போயிட்டாராம்,எங்கிட்ட எதுவுமே சொல்லலைன்னு சொன்னாரு. அதக் கேட்டு எனக்கு அதிர்ச்சியா இருந்தது. என்னாலயும் எதையும் யோசிக்க முடியலை."

"பிறகு?"

"வாங்க டீ சாப்புடப் போவலாம்னு கேப்ரியேல் வெளிய என்னை அழைச்சிட்டு வந்தாரு. ஓவியங்களை எடுத்துட்டுப் போனாரே தவிர, பணம் எதுவும் கொடுத்துட்டு போகலையாம்ன்னு சங்கடத்தோட சொன்னாரு. என்ன பதில் சொல்றதுன்னு எனக்கு ஒன்னுமே புரியலை. உங்க வீட்டு பரண்லயாவது அந்தப் படங்கள் எங்கயாவது ஒரு ஓரமா உங்க கண்ணு முன்னால இருந்திருக்கும். அவரு பணம் கொடுத்து வாங்கிக்குவாருங்கற எண்ணத்துல உங்களுக்கு ஒரு நம்பிக்கையைக் கொடுத்து, எல்லாப் படங்களயும் அவருகிட்ட கொடுக்க வச்சிட்டேன். இப்படி நடக்கும்னு எதிர்பார்க்கலை."

"சரி விடுங்க கேப்ரியேல், இதுல உங்களை குறை சொல்ல ஒன்னுமே இல்லை. விட்டுத் தள்ளுங்க. ஒருவேளை அவர் ஊருக்குப் போனதும் பணம் அனுப்பி வைப்பாரோ என்னமோன்னு சொல்லி அனுப்பிவச்சிட்டேன்."

"பணம் வந்ததா?"

"ஒரு பைசாவும் வரலை. அது கப்பலேறி போய்டுச்சின்னு எனக்கு அப்பவே புரிஞ்சிடுச்சி. ஆனாலும் இந்த விஷயத்துல கேப்ரியேல் ரொம்ப மனசு ஒடைஞ்சிட்டாரு. அவருக்கு ஆறுதலா இருக்கும்னு நான் அப்படி சொன்னேன்."

"நீங்க ஓவியரா இருந்தீங்கங்கறதுக்கு சாட்சியா இப்ப எந்த ஓவியமும் இல்லையா?"

"இருக்குது. ரெண்டு ஓவியங்கள் இருக்குது. ஆனா, எங்கிட்ட இல்லை."

"என்ன சார் சொல்றீங்க? புரியலையே."

"என்னுடைய 'போக்கிடம்' நாவல் கையெழுத்துப் பிரதிக்கு இலக்கியச்சிந்தனை பரிசு கிடைச்ச சமயத்துல ஒருநாள் அந்த அமைப்பினுடைய பொறுப்பாளர் பாரதி வீட்டுக்கு வந்து ரொம்ப நேரம் பேசிட்டிருந்தார். அப்ப நான் வரைந்த ஒரு ஓவியத்தை ஃப்ரேம் போட்டு சுவத்துல மாட்டியிருந்தேன். பாரதி அந்தப் படத்தைப் பார்த்துட்டு ரொம்ப அழகா இருக்குதுன்னு மகிழ்ச்சியா சொன்னாரு. உடனே நான் அந்தப் படத்தைக் கழற்றி துடைச்சி ஒரு பேப்பர்ல சுத்தி அவருகிட்ட என்னுடைய அன்பளிப்பா வச்சிக்குங்கன்னு சொல்லி கொடுத்துட்டேன்."

"இன்னொன்னு."

"சேலத்துல என் கூட பாலுன்னு ஒருத்தர் படிச்சாரு. பெரிய ஸ்போர்ட்ஸ்மேன். அவருடைய தம்பி இங்கதான் பெங்களூருல இருக்காரு. அவரு பேரு விஜயன். அவரு ஆசைப்பட்டுக் கேட்டாருன்னு இன்னொரு படத்தை பேப்பர்ல சுருட்டி அன்பளிப்பா கொடுத்துட்டேன்."

சொல்லிக்கொண்டே ஒரு பெருமூச்சோடும் புன்னகையோடும் எதிரில் இருந்த மேசையின் மீது தாளமிடுவதுபோல தட்டினார் விட்டல்ராவ்.

பாவண்ணன் <writerpaavannan2015@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**

**Editor : PRABHU THILAAK**

Posted at patrika channel egmore (Posted between 28-31st of Every month)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2024-2026. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.